திருவள்ளுவர் ஆண்டு 2047 சித்திரை - ஆனி
ஏப்ரல் - ஜூன் 2017

ரூ. 8.00



# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய
திங்களிதழ்

அருள்நெறித்தந்தை அவர்களின் 22ஆவது குருபூசை விழாவில் (9-5-2017)
ஆதீனக்கவிஞர் திரு. மரு. பரமகுரு, நேர்முக உதவியாளர் திரு. க. நீலமேகம் ஆகியோருக்கு
"தவத்திரு குன்றக்குடி அடிகளார் விருது" வழங்கும் நிகழ்வு.

சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்



விசாக விழா (7-6-2017)

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவர் ஆண்டு 2048 மாதம் : சித்திரை - ஆனி

மலர் : 30, 31 இதழ் : 4-6


# அடிகள் பெருமான் அளித்த விருது



"மார்பாரப் பொழிகண்ணீர் மழைவாரும்
திருவடிவும் மதுர வாக்கிற்
சேர்வாகும் திருவாயில் தீந்தமிழின்
மாலைகளும் செம்பொற் றாளே
சார்வான திருமனமும் உழவாரத்
தனிப்படையும் தாமும் ஆகிப்
பார்வாழத் திருவீதிப் பணிசெய்த..."

அப்பர் பெருமானின் அடிச்சுவட்டில் இருபதாம் நூற்றாண்டின் பிற்பாதியின் முழுப்பகுதியிலும் உலகை வலம் வந்த ஞானக் கதிரவன்தான் நமது குன்றக்குடி அடிகள் பெருமான்.

அடிகள் பெருமான் காரைக்குடி கம்பன் கழகத்தில் ஆற்றிய முதல் பொழிவாகிய "புதரிடை மலர்" என்ற பொழிவு உலகத்தின் ஞானமலர் குன்றக்குடியில் மலர்ந்துள்ளது என்பதை அடையாளம் காட்டியது.

மக்களுக்காக மக்களை நோக்கி ஆன்மீக நெறியில் மக்களை வழி நடத்த குன்றக்குடி ஞான பீடத்தில் மகாசன்னிதானத்தின் அருள் ஆட்சி, உலகின் அருள் நெறியாய் முகிழ்த்தது.

முடை நாற்றம் வீசும் மூட நம்பிக்கைகளுக்கு விடை கொடுத்து அன்புக் கரம் கொண்டு ஆதரவற்றோர்களுக்கு ஆறுதல் அளித்து அகிலத்தினை வழிநடத்தி அடிகள் கண்ட நெறிதான் "அருள்நெறி".

தமிழகத்தில் மட்டுமல்ல. தமிழர்கள் வாழும் பிற நாடுகளிலும் அருள்நெறி இயக்கம் மலர்ந்து வளர்ந்தது.

1. இறை நம்பிக்கையினை வளர்த்தல்
2. சமயப் பிணக்கை அகற்றச் செய்தல்
3. மொழி, கலை, சமயம், பண்பாடு, ஒழுக்கம் பற்றிய நூல்களும், இதழ்களும் வெளியிடுதல்
4. ஏழை எளியவர், நோயாளிகள் இல்லங்களுக்குச் சென்று உதவி புரிதல்
5. கல்வித் தொண்டு, மருத்துவத் தொண்டு ஆற்றி ஆதரவற்றோர் மற்றும் பெண்களுக்கு உதவிகள் செய்தல்

என்று அருள்நெறித் திருக்கூட்டம் தம் பணிகளை அடிகளின் தலைமையில் சிறப்பாக ஆற்றி வந்தது.

அடிகளின் "அருள்நெறி இயக்கம்" தந்தைப் பெரியாரின் நாத்திகப் புயலையும் எதிர்கொண்டது. 07.10.1952இல் "விடுதலை" நாளிதழில் "பக்தர்களுக்குப் பகுத்தறிவு வினாக்கள்" என்னும் தலைப்பில் பெரியார் முப்பது வினாக்களை விடுத்திருந்தார். இவ்வினாக்களுக்கு அருள்நெறித் திருக்கூட்டம் விடையளித்தது.

"கடவுள் என்ற வார்த்தை தோன்றி எவ்வளவு காலம் இருக்கும்?" - தந்தை பெரியாரின் வினா.

"மனிதன் என்று தன் அறிவுக் கண் கொண்டு உலகத்தைப் பார்த்து அவற்றின் அமைப்பு மீது இருக்கும் அற்புத ஆற்றலை உணர்ந்தானோ அன்றே கடவுள் என்ற சொல் தோன்றியது..." மகாசன்னிதானத்தின் பதில்.

தந்தை பெரியாருக்கும், மகாசன்னிதானத்திற்கும் இடையே கடவுள் மறுப்புக்கும் இறைநம்பிக்கைக்கும் இடையே நடந்த போர் முடிவுக்கு வந்தது.

மனிதத்தை மேம்படுத்துகின்ற முயற்சியில் ஆன்மீகத்திற்கும், பகுத்தறிவுக்கும் முரண்பாடுகள் இல்லை என்ற நிலையில் இருவரிடமும் நல்லிணக்க நட்பு மலர் மலர்ந்தது.

மனிதத்தை மேம்படுத்துகின்ற திசையில் அருள்நெறித் திருக்கூட்டம் நாயன்மார்களின் அடிச்சுவட்டில் திருத்தொண்டுகளைச் செம்மையாக ஆற்றி ஆன்மீக மறுமலர்ச்சி கண்டது. அடிகள் பெருமான் தலைமையில் அருள்நெறித் திருக்கூட்டம் உழவாரக் கருவி ஏந்தி தமிழகத் திருக்கோயில் கோபுரங்களின் மதிற்சுவர்களில் மண்டிக் கிடந்த மரம், செடி, கொடிகளை அப்புறப்படுத்தி, மக்களின் மனங்களில் மண்டிக் கிடக்கும் இருளை விரட்டி அருள்ஒளி பரப்பியது.

ஊனை உயிரை உருக்கும் தேனார் தீந்தமிழ் திருவாசகத்தின் மேல் ஈடுபாடு கொண்டு "திருவாசக விழா" தமிழகம் எங்கும் நிகழ்த்தினார்கள். மடாதிபதிகளின் பேரவையாகிய தெய்வீகப் பேரவை வழி அடிகள் பெருமான் ஆற்றிய தொண்டு அளப்பரியது.

தமிழ் அருச்சனை வழிபாட்டு முறையை தமிழகத் திருக்கோயில்களில் நடைபெற வழிவகைக் கண்டார்கள். தகுதியும், சீலமும் உடைய அனைவரும் இறைவனைப் பூவும் புனலும் சொரிந்து வழிபடலாம் என்பதைக் கொள்கையாக ஏற்றுக் கொண்டு அதை நடைமுறைப்படுத்த, "அனைவரும் அர்ச்சகர் ஆகலாம்" என்ற சட்டத்தை வரவேற்று சட்டப் பேரவையில் உரையாற்றி அதை நடைமுறைப்படுத்தப் பாடுபட்டார்கள்.

அடிகள் பெருமான் தலைமை ஏற்றதும் தெய்வீகப் பேரவை ஆன்மீக மறுமலர்ச்சியினை ஏற்படுத்தியது. ஆதரவற்றோரின்

அன்புக்கரமாய், ஏழைகளின் உயிர்த்துடிப்பாய், அனைவரையும் கடைத்தேற்றும் கலங்கரை விளக்காய் ஆன்மீக ஒளி சுடர்விட்டுப் பிரகாசிக்கும் பொற்காலமாய் சமய உலகத்தில் தெய்வீகப் பேரவை அமைந்தது.

“கேடும் ஆக்கமும் கெட்டத் திருவினார்
ஓடும் செம்பொனும் ஒக்கவே நோக்குவார்
கூடும் அன்பினில் கும்பிடலே அன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்”

வீடு பேற்றைக் கூட வேண்டாம் என்று மறுதலித்து விட்டு “என்கடன் பணி செய்து கிடப்பதே” என்று, திருத்தொண்டர் வாழ்க்கைத் தடத்தை மீண்டும் புதுப்பிக்கும் பணியை அருள்நெறித் திருக்கூட்டம் வாயிலாக அடிகள் பெருமான் நிகழ்த்தினார்கள்.

பசித்தவனுக்கு உணவாக, நோயுற்றவனுக்கு மருந்தாக இறைவன் இருக்கின்றான் என்ற நிலைக்கு ஏற்ப,

“படமாடக் கோயில் பகவற்கு ஒன்று ஈயின்
நடமாடக் கோயில் நம்பர்க்கு அங்கு ஆகா
நடமாடக் கோயில் நம்பர்க்கு ஒன்று ஈயில்
படமாடக் கோயில் பகவற்கு அது ஆமே”

என்ற திருமந்திரத்திற்கு ஏற்ப, மனித சமூகத்திற்குச் செய்கின்ற தொண்டு தான் இறைத் தொண்டு என்ற அடிப்படையில் குன்றக்குடியில் ஏழைமக்களின் மேம்பாட்டிற்குத் தொழிற்கூடங்களை உருவாக்கினார்கள்.

வறுமைக்கும், அறியாமைக்கும் எதிரான போர் குன்றக்குடியில் தீவிரமாக நிகழ்ந்தது. அதன் விளைவாய் குன்றக்குடியை “மாதிரிக் கிராமம்” என்று உலகம் பாராட்டியது.

மண்டைக்காடு மதக்கலவரத் தீயை மனிதநேயக் கண்ணீர் கொண்டு அணைத்தார்கள். சகல சமயங்களுக்கும் இடையே சகோதரத்துவமும், நல்லிணக்கமும் அவசியம் என்பதை வாழ்நாள்

91/1

முழுவதும் கடைசி மூச்சு வரை கடைபிடித்தார்கள். அதன்படி, "திருவருட் பேரவை" இயக்கம் கண்டார்கள்.

"பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும்..." என்ற திருக்குறளின் கொள்கையை நடைமுறைப்படுத்த, மேடு பள்ளம் அற்ற, சாதி சமய பேதமற்ற சமத்துவ சமூக அமைப்பு காணமுடியும் என்று திருக்குறள் நெறி பரப்ப "திருக்குறள் பேரவை" கண்டார்கள்.

பல்லக்கை மறுதலித்து, பட்டு பீதாம்பரங்களைத் துறந்து பாதம் நோக பாலைவனப் பாதையில் பயணித்து, எளிய மக்களின் தோழமையாகச் சுடர்விட்டு பிரகாசித்த ஞானவிளக்காய் உலக மானுடத்திற்கு கிடைத்த ஒப்பற்ற வரப்பிரசாதம் அடிகள் பெருமான்.

உலக மானுடத்தின் ஒப்பற்ற ஞானஒளி மண்ணில் நிறைந்து விண்ணில் விரிந்து 22 ஆண்டுகள் உருண்டோடி விட்டன.

காலப் பெட்டகமாய், ஞானக் கருவூலமாய் விளங்கும் அடிகள் பெருமானின் 22ஆம் ஆண்டு குருபூசை விழாவில் அவர்கள் நினைவுகளைப் போற்றும் வகையில் அடிகள் பெருமான் பெயரில் "தவத்திரு குன்றக்குடி அடிகளார் விருது" நிறுவப்பெற்று முதல் விருதுகள் இரண்டு பெருமகனார்களுக்கு வழங்கப்பெற்றன.

அடிகள் பெருமானின் பொது வாழ்க்கைப் பயணங்களில் நிழலாய் இருந்தவர்; அடிகள் பெருமானின் எழுத்து, பேச்சு; சிந்தனை, செயல் என அனைத்தையும் நூல்களாக ஆவணப்படுத்தியவர்; அடிகள் கண்ட "திருக்குறள் பேரவை;" "திருவருட் பேரவை" அமைப்புகளுக்கு செயல் துடிப்பாய் விளங்குபவர்; மண்டைக்காடு கலவரத்தில் மத நல்லிணக்கத்திற்கான தியாகப் பயணத்தில் தம் உயிரைப் பொருட்படுத்தாது உடனிருந்து பணி செய்தவர்; அடிகள் பெருமானுக்கு அற்புத அருளாலயம் அர்ப்பணிப்பு உணர்வுடன்

அமைத்தவர்; "மக்கள் சிந்தனை" இதழ் ஆசிரியர்; ஆதீன வரலாறு, குன்றக்குடி, பிரான்மலை, திருக்கோளக்குடி திருக்கோயில்களின் தலவரலாறுகளின் ஆசிரியராகவும் பல நூல்களைப் படைத்தவர்; உடல் நலிவுற்ற போதும் உள்ளம் தளராமல் அடிகளின் அடிச்சுவட்டில் நமக்கு உறுதுணையாய் உடனிருந்து பணி செய்பவர் ஆதீனப்புலவர் திரு. மரு. பரமகுரு அவர்கள் இவ்விருதைப் பெற்றுள்ளார்.

ஆதீனம் மற்றும் திருக்கோயில் அறப்பணிகளின் மேலாளர்; ஐந்து திருக்கோயில்களின் திருப்பணிகளைச் சிறப்பாக நிறைவேற்றியவர்; பல குடமுழுக்குகளை நிகழ்த்தியவர்; ஆதீனப் பணிகளுக்கும், ஆலயப் பணிகளுக்கும் வேராய் விளங்குபவர்; அடிகளின் எண்ணம் அறிந்து, விரைந்து செயல்பட்டவர்; இன்று நமக்கும் அனைத்துப் பணிகளிலும் உறுதுணையாய் விளங்கி அர்ப்பணித்துப் பணி செய்பவர்; திருக்கோயில்களின் பணிகளை வழிவழியாய் மீளா அடிமையாய்ப் பணிசெய்யும் குடும்பத்தைச் சேர்ந்தவர்; தம் பணிகளை அமைதியாய், அடக்கமாய் செய்து முத்திரைப் பதிப்பவர்; நமது ஆதீனத் திருக்கோயில் மேலாளர், நிர்வாக நேர்முக உதவியாளர் திரு. க.நீலமேகம் அவர்களும் இவ்விருதைப் பெற்றுள்ளார்.

"தவத்திரு குன்றக்குடி அடிகளார் விருது" பெற்ற இரு பெருமக்களும் அடிகள் பெருமான் நமக்கு விட்டுச் சென்ற அரிய விருதுகள்! அனுபவத்தில் கனிந்த அந்தப் பெருமக்களின் பணிகள் தொடரத் திருவருளையும், குருவருளையும் நினைந்து வாழ்த்துகின்றோம்.

அடிகள் பெருமான் காட்டிய தடத்தில் நமது பயணம் தொடர எல்லாம் வல்ல இறையருளும், குருவருளும் துணைபுரிய பிரார்த்திக்கின்றோம்.

என்றும் வேண்டும் இன்ப அன்பு

பொன்னம்பல அடிகள்

# அறநெறி அண்ணல் சிவத்திரு. ப. மூக்கப்பிள்ளை இறைவன் திருவடி சேர்ந்தார்



அறநெறி அண்ணல் சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை அவர்கள் இறைவனடி சேர்ந்துவிட்டார். ஆன்மீகத் தளத்தில் அப்பழுக்கற்ற சான்றோர். சாத்திர தோத்திரங்களில் தோய்வுடையவர்.

"வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவும் தமபோல் செயின்"

என்ற திருக்குறள் நெறிக்கு ஏற்ப அறநெறியில் ஈட்டிய பொருளை அறநெறியில் அள்ளிக் கொடுத்த வள்ளல் பெருந்தகை. நமது திருமடத்தின் திருக்கோயில் பணிகளுக்கு, கல்வி நிறுவனங்களின் வளர்ச்சிக்கு உறுதுணையாய் விளங்கியவர்.

சைவ ஆதீனங்களின் குருமகாசந்நிதானங்களிடம் ஆழ்ந்த பக்தியும் பற்றும் கொண்டவர். அடக்கமே உருவான அன்புப் பெருந்தகை; இனிய சொல்லினர்; அறச் சிந்தையர்; அன்பு நெஞ்சினர்; செயலாற்றல் மிக்கவர். தாயுமான சுவாமிகளின் தாழ்வாரத்தில் திருமுறைகளை, சைவசித்தாந்தத்தை, திருக்குறளை நாளும் நாளும் பரப்பியவர். திருச்சி தாயுமானசுவாமி கோயில் அறங்காவலராகச் சிறப்பாகப் பணியாற்றியவர். திருச்சிராப்பள்ளி திருமுறைமன்றம், திரிசிரபுரம் சைவ சித்தாந்த சபை, திருச்சிராப்பள்ளித் தமிழ்ச் சங்கம் முதலிய அமைப்புகளில் தலைமை ஏற்று நடத்திச் சிறப்புமிக்க பலபணிகளைச் செய்தவர். திருச்சிராப்பள்ளி திருமுறை மன்றத்தின் மூலம் ஓதுவார்களைப் பாராட்டிப் பொற்கிழி வழங்கி வந்தவர். எண்ணற்ற அரிய பணிகளைச் செய்த சிவத்திரு. ப. மூக்கப்பிள்ளை மறைவு சைவத் தமிழுலகிற்கு, ஆன்மீக உலகிற்கு ஈடு செய்ய முடியாத பேரிழப்பாகும். இவ்வாறு எண்ணற்ற அரும் பெரும் பணிகளாற்றிய அந்தத் தகைசால் சான்றோரின் ஆன்மா இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதி பெறப் பிரார்த்திக்கின்றோம்.

பொன்னம்பல அடிகள்

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருவாசகத் தேன்

(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)

## பணிவேண்டிப் பணிவோம்!

தமிழில் உவமை, சிறப்புடைய ஒன்று. ஒன்றை எளிதில் விளக்குவதற்கு உவமையைப் போல் உதவி செய்வது பிறிதொன்றில்லை. மாணிக்கவாசகர் அருளிச் செய்த திருவாசகத்தில் உள்ள உவமைகள் பலப்பல. அவையுள் எளிதில் விளங்கும் உவமைகள் மிகுதி. "ஊர் ஆ" "ஊர் நாய்" போன்ற உவமைகள் மிகமிகப் பொருட் செறிவுடைய உவமைகள் மட்டுமல்ல. அன்றாட வாழ்வில் கண்டு அனுபவிப்பவைகளே உவமைகளாகியுள்ளன.

இறைவன் - சிவன் அம்மையப்பன், நெருப்பும் சூடும் போன்றது. அம்மையப்பன் தத்துவம் பொருளும் ஆற்றலும் (Matter and Energy) போன்றது. பரமசிவம் இயங்குநிலையில் - தொழிற்படு நிலையில் சக்தியாகப் பரிணமிக்கிறது. நெருப்பையும் சூட்டையும் பிரிக்க இயலாதது போல அம்மையையும் அப்பனையும் பிரிக்க இயலாது. அதனாலேயே மங்கைபாகம் என்ற திருவுருவத்தில் - திருநாமத்தில் வழிபடும் வழக்கம் தோன்றியது; தோன்றி வளர்ந்தது. இறைவன் - சிவன் பெண்பால் உகந்தமையை வினாவாக்கி விடையளிக்கிறது திருவாசகம். திருச்சாழலில்,

*தென்பா லுகந்தாடும் தில்லைச்சிற் றம்பலவன்*
*பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடீ*
*பெண்பா லுகந்திலனேற் பேதாய்இரு நிலத்தோர்*
*விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ* (திருச்சாழல்-9)

என்று மாணிக்கவாசகர் பாடுகிறார். இறைவன் அம்மையப்பராக இருத்தலினாலேயே இந்த உலகம் இயங்குகிறது. உயிர்க்குலம் வளர்கிறது.

*"மாயிருஞ்சக ஆணொடு பெண்ணாய்*
*வயக்க முற்றன அகிலநா யகியும்*
*பாயும் வெள் விடைப் பாகரை*
*மணந்து"* (காஞ்சிப். தழுவக்குழைந்த படலம் 14)

என்று காஞ்சிப் புராணம் கூறும். சிவத்தை அம்மையப்பராகவே வழிபட வேண்டும். சிவம், அருளுவதெல்லாம் அம்மையப்பர் திருக்கோலத்திலேயாம். சிவத்தின் ஒரு கூறே அருள் செய்யும் அம்மை! என்றாலும் பெரிய புராணத்தில் வரும் அடியார் பெருமக்களுக்கு அருள் வழங்கிய பொழுதெல்லாம் அம்மையப்பன் திருக்கோலத்திலேயே நிகழ்ந்தது. அதனாலேயே அருள்பாலித்த திருத்தலங்களில் எல்லாம் கருவறையில் சிவலிங்கத்திற்கு முன் அம்மையப்பர் திருமேனியும் விளங்கிக் காட்சியளிக்கிறது. ஆற்றல் இளமையோடிருக்க வேண்டும். ஆற்றலை நாளும் இளமை நலத்துடன் பேண வேண்டும். ஆற்றலை இழப்பின் அனைத்தும் போகும். ஆற்றல் வளரும் தன்மையது; என்றும் இளமையோடிருக்கும் இயல்பினது; படைப்பாற்றலுடையது. அதனால் அம்மையைக் கூறும் பொழுதெல்லாம் இளமை நலப் பொருளைக் குறிப்பிடுவர்; போற்றுவர்.

*"மையிலங்கு நற்கண்ணி பங்கன்"*

கண்ணிற்கு மை, இளம் பெண்கள் தான் இட்டுக் கொள்வர். ஆதலால், உமாதேவியை "மையிலங்கு நற்கண்ணி" என்றார். "மையிலங்கு" என்ற சொற்றொடருடன் "நற்கண்ணி" என்றது அம்மையின் மையிட்ட கண் காமக் கவர்ச்சியுடையதல்ல என்றும் அது நலம் பயப்பது, இன்பம் தந்தருளி இறவாத அன்பு நெறியில் உய்த்துச் செலுத்துவது என்றும் பொருள்படும்.

கருணை - உதவுதல் என்பது கேட்டுச் செய்வதல்ல. தாமே எளிவந்து செய்வது. மாணிக்கவாசகர், இறைவன் - சிவன் தானே வந்தாட்கொண்டதாகவே பாடுகின்றார். அந்த எளிவந்த கருணையை நினைந்து நினைந்து மகிழ்கின்றார்; போற்றுகின்றார்.

*"வான் பழித்து இம்மண் புகுந்து*
*மனிதரை ஆட்கொள்ளும் வள்ளல்"*

என்று போற்றுவார். போற்றிப் புகழ்வார். சிவன் திருப்பெருந்துறைக் குருந்த மரத்தடிக்கு எழுந்தருளி வந்து ஆட்கொண்டார்; ஆட்கொள்ளுதல் என்றால் பொன்னும் பொருளும் போகமும் எடுத்த எடுப்பில் அருளுவதல்ல. ஞானிகள், நல்லவர்கள் பொன் முதலியவற்றை முதலில் விரும்பமாட்டார்கள். அவர்கள் இறைவன் பணி கொள்ளுதலையே விரும்புவார்கள். பணி கொள்ளுதலே, அருளிச் செய்தது போலத்தான்!

*"எது எமைப் பணிகொளுமாறது கேட்போம்!"*

என்பதூஉம் திருவாசகம். பணியில்செலுத்திய தாய் தந்தையை -

*" நல்ல தாய் தந்தை ஏவ*
*நானிது செய்யப் பெற்றேன்"*

என்று கூறும் சேக்கிழார் வாக்கு சிந்தனைக்குரியது. நமது வாழ்விலும் முயற்சிக்கு – உழைப்புக்குப் பணம் தூண்டுதல் சக்தியாக இல்லாமல் பணி செய்தலே தூண்டுதல் சக்தியாக இயங்கினால் நாம் வளர்வோம்! நமது நாடு வளரும். பணி செய்வதில் ஆர்வம் வேண்டும்" விருப்பம் வேண்டும். அர்ப்பணிப்பு உணர்வுடன் பணி செய்தல் வேண்டும்.

*" என் கடன் பணி செய்து கிடப்பதே"*

என்றார் அப்பரடிகளும், பணியைப் பணிக்காகவே விருப்பார்வத்துடன் செய்தல் வேண்டும். பணியின் விளைவுகள், எதிர் விளைவுகளைப் பற்றிக் கவலைப்படக்கூடாது. ஏன்? பணியின் பயனைக்கூட எதிர்பார்க்கக் கூடாது. "கிடத்தல்" என்பது அஃறிணை நிலை. அஃறிணைப் பொருள்கள் காலத்தொடு இசைந்து நின்று பணி செய்யும் பாங்கினை அறிக. பூத்துக் காய்த்துப் பயன் தரும் மரங்களை நோக்குக. அம்மரங்கள் வரவேற்புரையையும் எதிர்பார்ப்பதில்லை; நன்றி கூறலையும் எதிர்பார்ப்பதில்லை. ஒரோவழிச் செய்தாலும் விருப்பார்வத்துடன் செய்வதில்லை. வேண்டா வெறுப்பாகச் செய்கிறான். கூலியையே குறியெதிர்ப்பாக உடைய உழைப்பு, பூரண பலன் தராது. ஆதலால், நமக்கு உற்றார் உறவினர் நண்பர்கள் முதலில் வேலை தரட்டும்; பணிகள் வழங்கட்டும். எவரொருவர் பணிகளை வழங்கித் திறமையையும் அனுபவத்தையும் பெற உதவி செய்கிறார்களோ அவர்களே நமக்கு மிகவும் வேண்டியவர்கள்; நல்லது செய்பவர்கள். பணிகளை வழங்காது சோறும் துணியும் வழங்கினால் அது உதவியாகாது; வாழ்விப்பதாகாது; அதனாலேயே சேக்கிழார், "கைத்திருத் தொண்டினைப்" போற்றிப் புகழ்கிறார். இன்றோ வேலையைக் கண்டால் அஞ்சி ஓடுவது, வேலையை ஒத்திப் போடுவது, தட்டிக் கழிப்பது, அல்லது வேலை செய்வதற்கு சோம்பற்பட்டுக்கொண்டு விடுப்புகள் எடுப்பது போன்ற தீய பழக்கங்கள் இந்தியர்களை ஆட்கொண்டிருப்பதனாலேயே இந்தியா விடுதலை பெற்று ஐம்பது ஆண்டுகள் ஆகியும் முன்னேறவில்லை. வறுமையும் ஏழ்மையும் அகலவில்லை. என்று, இந்தியாவின் ஒவ்வொரு குடிமகனும் தனது பணியை – வேலையை ஊக்கத்துடனும் விருப்பத்துடனும் ஆர்வக் கிளர்ச்சியுடனும் அர்ப்பணிப்பு உணர்வுடனும் செய்கின்றானோ அன்றே இந்தியா வளரும்; தமிழ்நாடு வளம் கொழிக்கும்.

சிவன், வலியவந்து வாழ்தலுக்கும் உய்தலுக்கும் உரிய பணிகளை வழங்கி ஆட்கொண்டருளிய அருமையை மாணிக்கவாசகர்

உணரவில்லை. வளரும் குழந்தை! பொருள்களின் தராதரம் அறியாப் பருவம்! தங்கக் கிண்ணத்திற்கும் தகரக் குவளைக்கும் இடையில் மதிப்பீட்டு வேற்றுமைகளை அறிந்துகொள்ள இயலாத பருவம்! பொற் கிண்ணத்திற்கும் பொட்டுக் கடலைக்கும் மதிப்பீடு பிரித்தறியா நிலை! தின்னும் பொருளாதலால் பொட்டுக் கடலையிலேயே ஆர்வம் தலைகாட்டும். அந்தச் சூழ்நிலையில் வளரும் குழந்தைக்குப் பொற்கிண்ணத்தின் மதிப்பீடு தெரியாமல் பொட்டுக்கடலையை வாங்கிக்கொண்டு பொற்கிண்ணத்தைத் தருதல் வியப்பில்லை. அதுபோல, இறைவனின் திருவருள் சார்ந்த வாழ்க்கை வழங்கப்படுகிறது; உலகியற் கவர்ச்சியால் இழுக்கப்படுகிறது. ஆன்மா - உலகியற் கவர்ச்சியிலேயே சுழல்கிறது. திருவருளை - வலிய வந்தாட்கொண்ட பெருமானின் எளிவந்த கருணையை அருமை என்று அறிந்து போற்றுவதில்லை. நெடுந்தவம் புரிந்தும் காண முடியாத இறைவன் தாமே வந்து தலையளித்து ஆட்கொண்டருளிய கருணையின் அருமை அறியாத பேதைமையை "மழக்கையிலங்கு பொற்கிண்ணம்" என்றருளிச் செய்யும் நுட்பம் சிந்தனைக்குரியது. உணர்தலுக்குரியது.

இறைவன் - சிவன் வெண்ணீறு சண்ணித்த திருமேனியுடையவன். திருவெண்ணீறு சிவநெறியின் புனிதச் சின்னம். கடையூழிக் கூத்தில் எழுந்த பொடியின் சின்னமே திருநீறு. சிவநெறியைச் சார்தலுக்குத் திருநீறணிதலே முதற் சாதனம்.

*"என்னை ஆண்டிட்டு என்னையும் தன்*
*சுண்ண வெண்ணீ றணிவித்துத்*
*தூயநெறியே சேரும் வண்ணம்"*

என்ற திருவாசக வரிகளையும் எண்ணிக் கொள்க. திருநாவுக்கரசருக்கு, திலகவதியார் "திருவாளன் திருநீறு" வழங்கித்தான் சைவத்தில் சேர்த்தார். ஆன்மாக்கள் திருநீறு அணிந்தால் அவற்றின் வினை நீங்கும்; பாவமும் அகலும்; அமர நிலையும் அருளது நிலையும் எய்தலாம்! ஆனால் இறைவன் திருமேனியில் திருநீறு ஏன்? தாய்ப்பாலுண்ணும் குழந்தைக்குத் தாய் மருந்து கொடுப்பதில்லை. குழந்தைக்குப் பத்தியமும் இல்லை. குழந்தையின் நோய்க்குத் தாயே மருந்துண்கிறாள்; பத்தியம் பிடிக்கிறாள். அதுபோல இறைவன் தன்னைத் தொழுது எழும் பக்தர்களுடைய வினை வளம் கெடத் திருநீறு அணிகின்றான் என்று திருக்கோவையார் கூறும்.

"மெய்ம்மை அன்பருன் மெய்ம்மை மேவினார்" என்றார் அடிகள். பொய், கொடுமையினும் கொடுமையானது. அதனாலன்றோ தமிழ்மறை.

*"பொய்யாமை பொய்யாமை ஆற்றின் அறம்பிற*
*செய்யாமை செய்யாமை நன்று"*

என்று கூறியது! பொய் – இல்லாதது. புனைவுகளை ஒட்டிக்கொண்டு பொய் வரும். மாணிக்கவாசகர்,

*"யானே பொய் என் நெஞ்சும் பொய்*
*என் அன்பும் பொய்*
*ஆனால் வினையேன் அழுதால் உன்னைப்*
*பெறலாமே!"*

என்று அருளிச் செய்துள்ளமையை அறிக. பொய்ம்மையற்ற மெய்ம்மை வாழ்வு தேவையென்றால் பொய்யைப் பொய் என்று அறியும் அறிவு வேண்டும். பொய்ம்மையைப் பெருக்கிக் பொய்யில் கிடந்துழலும் பொய்யாய மாய வாழ்க்கையை நினைந்து அழக் கற்றுக்கொண்டால்தான் பொய்ம்மை அகலும்; மெய்ம்மை மேவும்.

மெய்ம்மை, உண்மையானது; நிலையானது; மெய்ப்பொருள் சார்பு நிறைந்தது. மெய்ப்பொருளைச் சார்ந்து வாழும் அன்பர்கள் மெய்ம்மை அன்பர்கள். மெய்ம்மை அன்பர்கள் தாம் மெய்ப்பொருளாகிய இறைவனைச் சார்தல் இயலும்; கூடும். மெய்ம்மை மேவாதாருக்கு இவ்வுலகும் இல்லை; அவ்வுலகும் இல்லை.

இறைவா, நான் பொய்யன் தான்! நான் அப்படியே பொய்யனாகவே வாழ்ந்து செத்துப்போனால் மற்றவர்கள் சிரிக்க மாட்டார்களா? காத்தாளக்கூடிய கங்காளன் காக்கத் தவறிவிட்டானே என்று இகழ்ந்து பேசமாட்டார்களா? பழிக்க மாட்டார்களா? இறைவா, நானும் பொய்யும் நின் கருணை கிடைக்காமையால் புறமே வந்துவிட்டோம்! என்னை எவ்வாறேனும் ஆகுக என்று வாளாவிட்டு விட்டுப் போய்விட்டாய்! இது நின் கருணைக்கு இசைந்த அறமா? பிறைசூடிய பெருமானே! பொய் நீக்கி என்னை ஆளாமை நினக்குப் பெருமைதானா? நல்லவும் தீயவும் அல்லாத எருக்கம் பூவினும் நான் கடைகெட்டவனா? இறைவா, பொய்மையை நீக்கு! மெய்ம்மையை அருள் செய்க! என் பொய்யெல்லாம் நீயே ஏற்றருள் செய்க! நான் உன்னை அரியை என்று கருதாதது பிழைதான்! நீ எளிவந்தாட்கொண்ட அருளைப் போற்றிக் கொள்ளாதது குற்றம்தான்! தேவர்களே இந்தத் தவற்றினைச் செய்திருக்கிறார்கள். அகந்தையினால் – பதவிப் பித்தால் தேவர்கள் செய்த பிழையெலாம் பொறுத்தருள் செய்தாய்.

இப்படியன், இந்நிறத்தன், இவ்வண்ணத்தன் என்று கண்டு அறிய இயலாத சிவத்தினைக் காண முயன்றனர். அது, "பழச்சுவை" என்றனர்; "அமுது" என்றனர். "அறிதலுக்கு அரிது" என்றனர். "அறிதலுக்கு எளிது" என்றனர். இங்ஙனம் அமரர்கள் தம்முள் முரண்பட்டு நின்று பேசினர்; விளக்கினர். ஆயினும் சிவம் உயிர்க்குலமெல்லாம் உய்தல் வேண்டி சிலைகளில் எழுந்தருளினன். இது அவன் திருவுரு. இறைவன் எழுந்தருளியுள்ள திருவுருவம், உருவமன்று. இலக்கியங்களில் அகரம் முதலிய நெடுங் கணக்கு இருப்பினும் பயன்படுமாற்றால் இலக்கியம் என்றே போற்றுகின்றோம். இரும்பினால் செய்யப்பட்ட கருவிகளை, இரும்பு என்று கூறுவதில்லை. பயன்படுநிலை கருதி "ஒலிபெருக்கி", "மண்வெட்டி" என்று கூறுவதே மரபு. அதுபோல இறைவன் எழுந்தருளியுள்ள திருவுருவம் சிலையாக இருக்கலாம். ஆயினும் பயன்பாடு வழிபாடு ஆதலால் அது திருவுருவம் அல்ல. இறைவனேதான்!

"திருக்கோயில் உள்ளிருக்கும் சிவன் தன்னைச் சிவன் எனவே கண்டவர்க்கு சிவன் உறைவன் ஆங்கே!" – இது சாத்திரம் காட்டும் உண்மை. இறைவன் எண்ணற்ற ஆன்மாக்களை ஆட்கொள்ளும் பணிக்காகவே திருவுருவத்தில் எழுந்தருளுகின்றான். திருக்கோயிலில் எழுந்தருளியுள்ள இறைவன் முன்னிலையில் பணிகேட்டு விண்ணப்பித்தலே மரபு. அண்மைக்காலமாக இந்த மரபு அறவே மாறி நுகர்பொருள்களை இரந்து கேட்கும் பழக்கம் தோன்றிவிட்டது. இன்று நமது சமயப் பிரார்த்தனைகளில் பணி செய்ய விரும்பும் விண்ணப்பம் அறவே இல்லை. மாணிக்கவாசகர் திருப்பெருந்துறை மன்னனிடம் "எது எமைப் பணிகொளுமாறது கேட்போம்" என்றே வேண்டுகிறார். பணி செய்தலே உய்யும் நெறி. "தொண்டலால் உயிர்க்கு ஊதியம் இல்லை" என்று திருமுறை கூறும். இந்நெறியை உணர்த்தும் மாணிக்கவாசகர் பாடலை நினைத்து இறைவனை வேண்டுவோம்.

*'அது பழச் சுவையென அமுதென அறிதற்கு*
*அரிதென எளிதென அமரரும் அறியார்*
*இது அவன் திருவுரு இவன் அவன் எனவே*
*எங்களை ஆண்டு கொண்டு இங்கெழுந்தருளும்*
*மதுவளர் பொழில் திரு வுத்தர கோச*
*மங்கையுள் ளாய் திருப் பெருந்துறை மன்னா*
*எதுஎமைப் பணிகொளும் ஆறது கேட்போம்*
*எம் பெருமான் பள்ளி எழுந்தருளாயே*

*(திருப்பள்ளியெழுச்சி–7)*

---

# சிலம்பில் தொல்காப்பியப் பதிவு – V

(தமிழாகரர். தெ. முருகசாமி)

தமிழ், தமிழர், தமிழ்நாடு என்ற முப்பெரும் பரிமாணங்களின் ஒட்டுமொத்த அடையாளமாகத் திகழும் சிலப்பதிகாரத்தில் இளங்கோவடிகள் முன்னோர் பொருளைப் பொன்னேபோல் போற்றும் மரபில் தங்கத் தகட்டில் இரத்தினத்தைப் பதித்தாற்போல் தொல்காப்பியத்தைப் பதித்துள்ள பாங்கில் இக்கட்டுரையில் கோவலன் உச்சரித்த சொற்கள்வழி அவனது வாழ்வியலை உணரலாம்.

கற்பரசி கண்ணகியோடு மனையறம்பட்டு வாழும் கோவலன், ஆடல் மகளாம் மாதவியை விரும்பும் வாழ்க்கையின் சூழ்நிலைக் கைதியாகி விட்டாலும் ஊழ்வினைக் கைதியாகிவிட்டான் என்பதே சிலம்பின் யதார்த்தப் பார்வையாகும்.

தேவலோக இந்திரனது அவையில் அகத்திய முனிவரது சாபத்திற்கு இலக்காகிய ஊர்வசி காவிரிப் பூம்பட்டினத்தில் மாதவியாகப் பிறந்தாள். இந்திர சபையில் ஊர்வசியை விரும்பிய இந்திரனது மகன் சயந்தன் – மாதவியின் ஆடற்கலைக்கான பரிசுப்பொருளாய் (தலைக்கோல்) அமைகிறான் என்பது ஊழ்வினையான கதைப்பாங்கு.

நீலி என்பாளின் சாபத்தால் பிறந்த கோவலன், பின்னர் கொலையுண்டு சாவதற்கேற்பத் தன் மனைவியை மறந்து மாதவியை நாடிக் குடும்பம் நடத்தினான். கண்ணகியோடு அவன் வாழ்ந்த காலத்தினும் மாதவியோடு வாழ்ந்த காலங்களே மிகுதியாகும்.

பெறுதற்கரிய மணிமேகலையாம் மக்கட் செல்வத்தைப் பெற்றாலும் அவன் தன் குலந்தரு வான் பொருட்செல்வத்தையெல்லாம் இழந்தான். இந்த இழப்பை இளங்கோவடிகள் இலம்பாடு (வறுமை) என்கிறார். இச்சொல்லை அவனே உணர்ந்து உச்சரிக்குமாறு செய்கிறார்.

கானல்வரிப் பாட்டால் மாதவியைப் பிரிந்த கோவலன் கண்ணகியை நாடி வந்தான். வந்தவன் பொருள் முட்டுப்பாட்டால் வந்திருக்கக்கூடும் என்றே அவள் எண்ணி அளவில் அவனும், அவன் எதிர்பாரா நிலையில்,

"சலம்புணர் கொள்கைச் சல்தியோ டாடிக்
குலந்தரு வான்பொருட்குன்றந் தொலைந்த
இடும்பாடு நாணுத் தரும் எனக்கு" (கனாத்)

என்றான். கோவலனது இந்தக் கூற்றில் இரண்டு செய்திகள் வெளிப்படுகின்றன. செல்வத் தளர்ச்சியான வறுமை ஒருபுறமிருந்தாலும்

சீசீ இந்தப் பழம் புளிக்கும் எனக் கருதும் அளவிற்கு மாதவி பற்றிய எண்ணத் தளர்ச்சியான வறுமையும் அவனைக் கண்ணகிபால் வரவழைத்தன எனத் தெரிகிறது.

வடுநீங்கு சிறப்பின் கண்ணகியை மறந்து விடுதல் அறியா விருப்பினனாய் வாழ்ந்தவன் அவளைத் திடுமென விட்டுப்பிரிந்தான் எனில் அதற்கு அவனாகத் தேடிக்கொண்ட இலம்பாடே (வறுமை) காரணம் என ஒப்புக் கொள்வானாய் வாக்குமூலம் அளிக்கிறான்.

மாயத்தாளோடு கூடி ஆடிய தீய ஒழுக்கத்தால் தன்குலத்தார் தந்த மலையளவான செல்வங்கள் யாவும் தொலைந்து ஒழிந்தன. அதனால், தான்நாணப் படுவதாகக் கூறுகிறான். ஈண்டு அவன் பயன்படுத்தும் இலம்பாடு என்ற சொல்லாட்சிதான் தொல்காப்பியத்தோடு தொடர்புடையதாக உள்ளது.

– இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை – என்பது தொல்காப்பிய உரியியலின் (62) நூற்பா. இச்சொல் பற்றிப் புள்ளி மயங்கியலில் தொல்காப்பியர்

"இலம்என் கிளவிக்குப் படுவரு காலை
நிலையலும் உரித்தே செய்யு ளான". (21)

என்கிறார். அதாவது இல்லாமைப் பொருள்தரும் இலம் என்ற சொல்முன், படு என்ற சொல்சேர இலம்படு என்றாகிச் செய்யுளில் கையாளப்படும் என்பது கருத்து, இலம்படு என்றால் வறுமை.

இலம்படுபுலவர் என்ற சங்க இலக்கியத் தொடருக்கு (மலைபடு.576) வறுமையால் பற்றப்பட்ட புலவர் என்பது கருத்து. அதாவது வறுமையானது தானே வந்து புலவரிடம் குடிகொண்டது என்பது கருத்து.

இலம்படு என்ற சொல்லே இலம்பாடு என நீண்டுவரும். படுதல் என்ற தொழிற்பெயரில் தல் விகுதி கெட படு என்பதாக மட்டும் நிற்பதை முதல் நிலை (பகுதித் தொழிற்பெயர் என்பர். இந்தச் சொல் (படு) பாடு என நீண்டு வரும் போது முதல்நிலைத் திரிந்த தொழிற்பெயர் எனப் பெயர் பெறும். சுடுதல், சுடு, சூடு என்பன போல் படுதல், படு, பாடு ஆகும். இப்படியாகப் படு – பாடாக மாறி உள்ள சொல்லையே தொல்காப்பியர் உரியியலில் கூறினார். புள்ளி மயங்கியலில் இலம்படு என்றும் உரியியலில் இலம்பாடு

என்றும் இருவேறாய்க் கூறினார். புள்ளி மயங்கியலில் இலம்படு என்றும் உரியியலில் இலம் பாடு என்றும் இருவேறாய்க் கூறினாலும் வறுமை என்றே பொருள்படும். ஆனாலும் அவ்வறுமை ஓரிடத்தில் எழுவாயாகவும் மற்றோரிடத்தில் செயப்படு பொருளாகவும மாறிப் பொருள்தரும் நிலையில்தான் கோவலனின் வார்த்தைத் தொல்காப்பியப் பதிவை உறுதிப்படுத்துவதாக உள்ளது.

இலம்படு நாணுத் தரும் என்றால் வறுமையைப் பற்றிக் கொண்டதால் வந்த நாணம் என்பது பொருள். வறுமையைத் தானே வரவழைத்துக் கொள்வதையே இலம்பாடு என்ற சொல், பொருள் உணர்த்துகிறது.

இத்தகு சொற்குறிப்புகளால் கோவலனை வறுமை பற்றாத நிலையில் அவன் வறுமையைப் பற்றிக்கொண்டான் என்பதையே இரண்டு காரணங்களால் உறுதிப்படுத்தினான்.

கோவலன் தானேதான் மாதவியைடைந்து ஆடிப்பாடிச் சீரழிவைத் தேடிக்கொண்டதால் "சலதியோடு ஆடி" என்றான்.

தன்னை வாழவைக்கவே முன்னோர் பொருள் தந்தாலும் அவற்றைப் பெருக்கி வாழாமல் சுருக்கி வாழ்ந்த குறை, அவனையே சாரும் என்பதால் வான்பொருள் குன்றம் தொலைந்த நாணம் என்றான், இவற்றால் தானே வறுமையைத் தேடிக்கொண்டான் எனத் தெரிகிறது. ஈண்டுக் கோவலன் "தொலைத்த" எனக் கூறியிருந்தால் வறுமையே அவன் பற்றிக் கொண்டதற்குப் பொருத்தமாய் இருந்திருக்கும். ஆனால் தொலைந்த என்றதால் வறுமையானது கோவலைனப் பற்றிக் கொண்டதாய் உணர இடந்தருகிறதே என்பதால் பொருள் பொருத்தம் இல்லையே எனலாம்.

இதனையும் ஓர் இலக்கண உணர்வால் கதைப் பொருத்தத்தோடு உண்மை உணரலாம். பேருந்துகள் ஓடின என்றால் அவை தானே ஓடினபோல் தெரிந்தாலும் ஓட்டப்பட்டன என்பதுபோலவே ஈண்டு வான்பொருள் குன்றம் தொல்லந்த, அதாவது தொலைந்தன என்றது தொலைக்கப்பட்டன என்ற கருத்தில் கூறப்பட்டதாகும். இப்படியாக வருவதைத் தொல்காப்பியர், (வினையியல், 49)

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியல் மரபே",

என்றார்.

பிறவற்றால் செய்துமுடிக்கப்படும் சில, தானே செய்தது போலக் கூறுவது ஓர் இலக்கணமுறைப்பாடு, நாடகம் நடந்தது என்றால் நாடகம் நடத்தப்பட்டது என்பது போலவே வான்பொருள் குன்றம் தொலைந்த என்பது தொலைக்கப்பட்டது என்பதாகக் கூறப்பட்டது. இதனால்

கோவலனால் பொருள் தொலைக்கப்பட்டன என்ற உண்மை புலப்படுகிறது. மேலும் இக்கருத்து குன்றம் தொலைந்த என்றதில் குன்றம் என்ற சொல்லாலும் விளங்குகிறது.

குன்று என்ற சொல் தொலைந்த என்ற வல்லின வருமொழியோடு சேருங்கால் அம் சாரியை சேர்ந்து குன்றம் ஆகும் என்பது தொல்காப்பியக் குற்றியலுகரப் புணர்ச்சி விதி, ஈண்டுக் குன்று என்பது மலையைக் குறித்தாலும் மென்தொடர்க்குற்றியலுகரம் என்ற இலக்கணச் சொல்லின்படி மாதவிக் கொடியோடு பற்றிய கோவலன் எல்லா வகையாலும் குலைந்து குழைந்து போனதால் இல்லறப் பண்பால் காப்பிய மாந்தருள் தொலைந்து காணாமற்போகும் வறுமைப்பட்டதையே இளங்கோவடிகள் அவன் வாயால் உணரச் செய்தார். ஆக இலக்கியத்திற்கு அணவாக உள்ள இலக்கண மாண்பைக் கோவலனால் உணர்த்தினார் இளங்கோ எனலாம்.

---

"மக்கள் சிந்தனை"யில் வெளிவரும் கட்டுரைகள், கவிதைகள் முதலியவற்றில் அமைந்துள்ள கருத்துக்களுக்கு அவற்றை எழுதியவர்களே பொறுப்பாவர்.

– ஆசிரியர்

## அன்பான வேண்டுகோள்!

சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.

ஆயுள் சந்தாவாகவோ, அல்லது ஆண்டுச் சந்தாவாகவோ அல்லது புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.

– ஆசிரியர்

## பத்மஸ்ரீ எஸ்.எம். கணபதி ஸ்தபதியார் மறைவு

எழுவன்கோட்டை திரு.எஸ்.எம். கணபதி ஸ்தபதியார் 6.4.2017 அன்று சென்னையில் காலமானார் என்பதறிந்து “மக்கள் சிந்தனை” வருந்துகிறது. அவர்தம் பூதஉடல் அவர் பிறந்த ஊராகிய எழுவன் கோட்டைக்குக் கொண்டுவரப்பெற்று 8.4.2017 அன்று நல்லடக்கம் செய்யப்பட்டது. தலைசிறந்த சிற்பக்கலை வல்லுநரைத் தமிழகம் இழந்துவிட்டது. இப்பெருமகனார் ஆந்திர அரசின் ஸ்தபதியாகவும் திருப்பதி அருள்தரு வேங்கடாசலபதி திருக்கோயில் தலைமை ஸ்தபதியாகவும் அமர்ந்து திருப்பணிகள் பல செய்ததோடு மேலும் பல திருக்கோயில்கள் திருப்பணி செய்தவர். சிற்ப சாத்திர விற்பன்னர். அருள்நெறித் தந்தையவர்களிடமும், இப்போதைய மகாசந்நிதானம் அவர்களிடமும் மாறாத அன்பு பூண்டொழுகியவர். அருள்நெறித் தந்தையவர்களால் “சிற்பகலாநிதி” விருது பெற்றவர். இவர்தம் மறைவு சிற்பக்கலையுலகிற்கு ஈடு செய்ய முடியாத இழப்பாகும்.

இப்பெருமகனாரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்தம் குடும்பத்தினருக்கும் அன்பர்களுக்கும் “மக்கள் சிந்தனை” ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்வதோடு அவர்தம் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதிபெறப் பிரார்த்திக்கிறது.

– ஆசிரியர்

## திருக்கூட்டம்

திருக்கூட்டம் என்பது அழகான சொல். “திரு” என்பது எழுத்தாலான சொல் மட்டுமன்று, “திரு” – கண்டோரால் விரும்பப்படும் தன்மை என்பார் பேராசிரியர். இறைவனுக்கே “திரு” என்றொரு பேருண்டு. திருவருட் சிந்தனையுடையோர் பலர் கூடிய கூட்டம், திருக்கூட்டம். திருவருட் சிந்தனையுடையோர் தனித்து வாழார். தனிமையிழந்த நிலையிலேயே அடியாராகின்றனர். “நான்”, “தான்” என்ற சொற்கள் வழிப்பட்ட முனைப்பு, கழனியில் உள்ள களையினும் கொடியது, அடியார் வாழ்க்கைக்கு!

# தமிழால் தானே!

(வினையாலணையும் பெயர்கள் மிகுந்துவர
எழுதிக் காட்டும் புதியபாடல்)

(முனைவர் ஆலந்தூர் கோ. மோகனரங்கன்)

*அடியேனை ஆட்கொண்ட தமிழே! நன்மை*
*அறியேனை அடங்கானை அறவோன் ஆக்கிக்*
*கொடியேனைக் குழையேனைச் செருக்கால் வந்து*
*கூடானைக் குதிப்பானைக் கொல்வான் தன்னைத்*
*தடியேனைத் தவறுபல நிகழ்த்து வோனைத்*
*தாய்மொழியை மதியானைத் தமிழில் கல்வி*
*படியேனைப் படிப்போரைப் பழிக்கின் றானைப்*
*பண்பறிந்தோன் ஆக்குவதும் தமிழால் தானே!*

*கடையேனை அரசுபணி தமிழில் தீட்டிக்*
*காட்டானைத் தமிழ்பேச நடுங்கு கின்ற*
*தொடையேனைத் தமிழுக்குத் தாழ்வு நேர்ந்தால்*
*துடியேனைத் துயர்கொள்ளா தானை, அஞ்சும்*
*நடையேனைத் தக்காரை நசுக்கு வோனை*
*நலம்பேசா நாவானை நரியின் உள்ளம்*
*உடையேனை ஊரழிப்பான் செயலை மாற்ற*
*ஒப்பானைத் திருத்துவதும் தமிழால் தானே!*

*ஆள்வாரை, ஆளுகின்ற துறைகள் தோறும்*
*ஆட்டுவிக்கும் தலைமையரைத் தமிழைக் காக்க*
*நீள்வாரைக் காண்பதுவே நிலத்தின் ஆவல்!*
*"நீங்காதார் தமிழ்நிழலை" என்று வாழ்ந்து*
*மாள்வாரை மலைஉச்சி கொண்டு சேர்ப்பார்!*
*மாட்டாரை மன்னிப்பார் இல்லை! அன்னார்*
*தேள்வார்க்கும் நஞ்சுடையோர் தேடும் நண்பர்*
*திருந்தியவர் வருவாரும் தமிழால் தானே!*

*நல்லாளன்! வல்லாளன்! நம்ப வல்லான்!*
*நட்பாளன்! நன்னெறியான்! நடந்தான் என்று*
*சொல்லாளன் போற்றவொரு துணைவன் ஆகித்*
*தோற்றோனும் தூங்காத தொழிலோன் போல*
*எல்லாரும் தமிழ்வணங்கும் எழுச்சி ஊட்ட*
*ஏற்றபணி உமதென்றே இருகை கூப்பிப்*
*பல்லாண்டு பல்லாண்டு பணிவோன் ஆகிப்*
*பாடுவதும் பரப்புவதும் தமிழால் தானே!*

---

நீங்கள் கற்றுக்கொண்டதை மட்டுமே உங்கள் குழந்தை கற்றுக் கொண்டால் போதும் என நினைக்காதீர்கள். அவர்கள் வேறொரு யுகத்தில் பிறந்திருக்கிறார்கள். அவர்களுக்கு இன்னும் நிறைய தேவைப்படும்.

- ரவீந்திரநாத் தாகூர்

## பேராசிரியர் அ. அறிவுநம்பி காலமானார்

புதுச்சேரி மையப் பல்கலைக்கழகத்தின் தற்காலிகத் துணைவேந்தராகச் சில காலமும் தமிழ்ப் பேராசிரியராகவும் திகழ்ந்த பேராசிரியர் டாக்டர்.அ.அறிவுநம்பி அவர்கள் 9.4.2017 அன்று புதுச்சேரியில் காலமானார் என்பதறிந்து “மக்கள் சிந்தனை” வருந்துகிறது. இப்பெருமகனார் காரைக்குடி அழகப்பா கலைக் கல்லூரியின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியரும் பெருங்கவிஞருமான பூ.அமிர்தலிங்கனாரின் புதல்வராவார். ஆழ்ந்த தமிழ்ப்புலமையும் ஆங்கிலப் புலமையும் நிறைந்தவர். பன்னாட்டு ஆய்வுக் கருத்தரங்குகள் பலவற்றிலும் கலந்து கொண்டு ஆய்வுக் கட்டுரைகள் வாசித்த பெருமைக்குரியவர். இவர்தம் தமிழ்த் தொண்டால் புதுச்சேரி மையப் பல்கலைக்கழகம் பெருமை பெற்றது. இப்பெருமகனார் மறைவு தமிழுக்குப் பேரிழப்பாகும்.

இவரை இழந்து ஆறாத் துயரத்தில் ஆழ்ந்திருக்கும் அவர்தம் குடும்பத்தார்க்கும் அன்பர்களுக்கும் “மக்கள் சிந்தனை” ஆழ்ந்த இரங்கலைப் புலப்படுத்திக் கொள்வதோடு அவர்தம் நல்லுயிர் இறைவன் திருவடி நீழலில் இன்ப அமைதிபெற இறைஞ்சுகிறது.

- ஆசிரியர்




## உலகத் திருக்குறள் பேரவை விழுப்புரம் மாவட்டச் செயலாளர் புலவர் **நயம்பு அறிவுடைநம்பி** அவர்களுக்கு "திருவள்ளுவர் விருது"

திருக்குறள்மாமுனிவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்கள் நிறுவிய உலகத் திருக்குறள் பேரவை இயக்கத்தின் விழுப்புரம் மாவட்டச் செயலாளர் புலவர் நயம்பு அறிவுடைநம்பி அவர்கள் மேனிலைப்பள்ளித் தமிழாசிரியராகப் பணியாற்றி ஓய்வு பெற்றவர். திருக்குறளில் ஆழ்ந்த புலமையோடு திருக்குறள்நெறி நிற்கும் சால்புடையவரும் திருக்குறள் நெறிபரப்பும் திருத்தொண்டு வாழ்வினரும் ஆவார். திருக்குறள் மாமுனிவரின் திருக்குறள் பணியில் ஆர்வம் காட்டி உழைத்தவர். இப்பெருமகனாரின் ஐம்பதாண்டுக் காலப் பல்வேறு திருக்குறள் பணிகளைப் பாராட்டி, சென்னை புரோபஸ் நிறுவனம் இந்த ஆண்டு பொங்கல் விழாவில் 19.1.2017 அன்று கோபாலபுரம் ஆண்கள் மேனிலைப்பள்ளியின் நிறுவனத் தலைவர் திரு. ஆர்.டி.நமச்சிவாயம் அவர்கள் தலைமையில் செயலாளர் என்.இராம்மோகன் அவர்கள் முன்னிலையில் "கலைமகள்" ஆசிரியர் கீழாம்பூர் சங்கரசுப்பிரமணியன் அவர்களால் "திருவள்ளுவர் விருது" வழங்கப்பெற்றது. திருவள்ளுவர் விருது பெற்ற புலவர் நயம்பு அறிவுடைநம்பி அவர்களை "மக்கள் சிந்தனை" பாராட்டி வாழ்த்துகிறது.

---

# ஒரு திருக்குறள் தேவாரத்தில் விளக்கம் பெறல்

(தருமையாதீனப் புலவர் தா. குருசாமி தேசிகர்)

திருக்குறள் மெய்யுணர்தலில் 4ஆவது திருக்குறள் :

"ஐயுணர்வு எய்தியக் கண்ணும் பயமின்றே
மெய்யுணர்வு இல்லாதவர்க்கு" என்ற திருக்குறளுக்குப் பரிமேலழகர் தரும் விளக்கம் உணரத்தக்கது. "சொல்லப்படுகின்ற புலன்கள் வேறுபாட்டால், ஐந்தாகிய உணர்வு, அவற்றை விட்டுத் தம்வயத் தாயவழியும், அதனால் பயனில்லையாம். மெய்யினை உணர்தல் இல்லாதவர்க்கு" என்பது அவர்தரும் விளக்கமாகும்.

அதாவது புலன்வழிச்செல்கின்ற மனம் ஒருவனுக்கு, அவற்றின் வழி செல்லாமல், புலனடக்கம் ஏற்பட்டாலும், அதனால் பயன் இல்லை, மெய்யாகிய உண்மையின்னை அறியாதவனுக்கு என்பதாகும். மெய்யாகிய உண்மை யாது?

இறைவன் ஒருவனே மெய்யாகும். மெய்யப்பன் என்பது சிவனுக்கு உரிய பெயராகும். "மெய்யர்" என்று அப்பர் தேவாரம் சிவனைச் சுட்டும். சிவனை வணங்காதவர் - தியான ஒழுக்கத்தில் தலைசிறந்திருந்தாலும், மனம் ஒருமைப்பாடுற்றாலும் அவற்றால் பயனில்லை என்பது குறளின் இக்கருத்து விளக்கம் தருகின்றது.

இன்று பலரும் பயிற்சியும், தியானப் பயிற்சியும் செய்து வருகிறார்கள். சில பள்ளி கல்லூரிகளில் இப்பயிற்சி நிகழ்கின்றன. அங்கே சிவசாதனங்கள் திருநீறு, உருத்திராக்சம் காணப்படுவதில்லை.

சிவனை முன்னிறுத்தி வழிபாடு கற்பிப்பதில்லை. இதனால் சிவம் நிலவாத பயிற்சிகளால் பயனில்லை என்பது குறிப்பு.

மனம் மடங்கி ஒருதலைப்பட்டு விடயங்களில் செல்லாமல் யோகத்தில் - தியானத்தில், கண்டம், இதயம், நெற்றி கபாலம், நாபி, தாரணை இவை அனைத்தும் ஒருமுகப்படுதல் என்பது தனிப் பயிற்சியாகும். இப்பயிற்சிகள் உடலை வளர்க்கும். உயிரை வளர்க்காது.

"உடம்பை வளர்த்தேன்
உயிர் வளர்த்தேனே"

என்பது திருமூலர் வாக்கு. இவ்வாக்கு மெய்யுணர்வு வேண்டும் என்பது தெளிவுறுத்தும்.

உயிரை வளர்ப்பதுதான் மெய்யுணர்வாகும். இதனை நாம் இன்று தத்துவ ஞானம் என்போம். விவேகானந்தர் இத்தத்துவ ஞானத்தை எட்டாமல், பிரமத்தை உணர்தல் என்று கூறி மனம் அடங்கும் உபாயத்தை மட்டும் கூறிச் சென்றார். அதனால்தான், கவிஞர் சுரதா அவர்கள்,

"விவேகமுள்ள தமிழ்நாட்டுக்கு
விவேகாநந்தர் கருத்து எதற்கு" என்றார்.

நகரத்தாராகிய வணிகப்பெருமக்கள் அதனால்தான் தமிழ்நாட்டின் பலதலங்களில் வேதாகம தேவாரப்பாடசாலைகள் வைத்தும், பல கோயில்களைத் திருப்பணி செய்தும் மெய்யில் நின்று வாழ்வுப் பயனை அடைந்தனர். நகரத்தார் இனத்தில் தான் "மெய்யப்பன்" "அண்ணாமலை" வினைதீர்த்தான்" "இயற்பகை" போன்ற பெயர்கள் வழங்கக் காணலாம். மற்ற இனத்தாரிடமும் ஒரோவழி காணலாம்.

இனி ஒரு தேவாரப்பாடல் பரிமேலழகர் மொட்டையாகச் சொன்ன உரையை, இதுதான் மெய்யான உரை என்று உணரும்படி திருஞானசம்பந்தர் அருளிய பாடல் இங்கு காட்டப்படுகிறது. இப்பாடல் திருத்தென்குடித்திட்டை, தலப்பாடலில் ஒன்று.

"ஊறினார் ஓசையுள் : ஒன்றினார் ஒன்றிமால்
கூறினார் அமர்தரும் குமரவேள் தாதையூர்
ஆறினார் பொய்யகத்து; ஐயுணர்வு எய்திமெய்
தேறினார் வழிபடும் தென்குடித்திட்டையே"

இப்பாடல் பிறந்த இடம் இன்று திட்டை என வழங்குகிறது. பக்தர்களால் குருத்தலம் என்று கூறப்படுகிறது. ஆனால் இத்தலம் தேவாரம் பெற்றதனால்தான் பிரபலமானது என்று பலர்க்குத் தெரியாது.

இதனை அறிந்த நகரத்தார் இக்கோயிலைத் திருப்பணி செய்து மெய்யுரை வைத்தனர்.

இத்தேவாரப் பாடலின் பொருள் தருமை ஆதீனம் வழங்கிய நன்கொடையாகும். பாடலின் பொருட்குறிப்பு வரிசைப்படுத்தப்பட்டுள்ளது.

1. இறைவர் எப்பொருளிலும் நிறைந்தவர்.
2. எல்லா ஓசைகளிலும் ஒன்றியவர்.
3. திருமாலை ஒருகூறாகக் கொண்டவர்.
4. அவர் குமரக்கடவுளின் தந்தையாவார்.
5. அவர் இருக்கும் நகரானது ஆறு பகைகளாகிய காமம், குரோதம், உலோபம், மோகம், மதம், மாச்சரியம் இவற்றைக் களைந்து

6. நிலையற்ற பொருள்கள் மேல் செல்லும் அவாவினை அடக்கி,
7. மனத்தைப் பொறிவழிச் செல்லவிடாது ஒருமுகப்படுத்தி
8. சிவனே மெய்ப்பொருள் எனத் தெளிந்தவர்கள் வழிபடும் திருத்தென்குடித்திட்டை என்பதாகும்.

**சொற்பொருள் தெளிதல் :**

பொய்யகத்து ஆறினார் - பொய்ப்பொருள்கள் மேற்செல்லும் அவாவினை அடக்கி அடங்கினவர்.

இவ்வாறு அடங்கினாலும், மெய்யுணர்வாகிய சிவத்தை உணராமல் இருந்தால் வாழ்க்கையின் முடிந்த பயனாகிய சிறந்த வீட்டை அடையமாட்டார். அதனைத்தான் சம்பந்தர் "மெய்தேறினார்" என்று அருளுவார். மெய்தேறுதல் என்பது சிவனே பரம்பொருள் எனத் தெளிதல். புத்தரும் சமணரும் மெய்யைக் காட்ட - எட்ட தவறியதை ஈண்டு குறிப்பாக உணரலாம்.

"சிவன் என யானும் தேறினன் காண்க" என்பது திருவாசகம். மேற்கண்ட திருக்குறளின் உண்மைப்பொருள், யான் காட்டிய தேவாரப் பாடலாலும், தெளிபொருளாலும், அரும்பொருளாலும் சிவவழிபாடு ஒன்றே மெய்யுணர்வு என்பதாகும்.

"பொய்ப்பொருள்" என்பது நிலைமாறுபாடுடையது:

அதனை நம் திருமுறை ஆசிரியர்கள் நேரடியாகவே பல இடங்களில் சுட்டிச் சென்றுள்ளனர். அவற்றுள் சம்பந்தரின் ஒருபாடல் மட்டும் ஈண்டுச் சிந்திக்கத்தக்கது.

பெண்டிர் மக்கள் சுற்றம் என்னும் பேதைப் பெருங்கடலை
விண்டு பண்டே வாழமாட்டேன் வேதனைநோய் நலிய
கண்டுகண்டே உன்றன்நாமம் காதலிக்கின்றது உள்ளம்
வண்டுகிண்டிப் பாடுஞ்சோலை வலிவலம் மேயவனே.

புத்த சமணப் பெரியோர்கள் நிலையாமையை நன்றாக ஓதி உணர்ந்து இருந்தும், நிலைப்பொருளைக் காட்டத் தவறியதால், வள்ளுவரும் அவர் காட்டிய தடத்தை, நன்றாக ராஜபாட்டையாக்கி, தடத்தை காட்டியதுமின்றி, தாமே நால்வர் பெருமக்கள் நடந்து காட்டி வழிப்படுத்திய செய்திகள் நம்மை வழிப்படுத்தி தடம்பதிய வைக்கும்.

---

# திருக்குறளைத் தேசிய நூல் ஆக்குவோம்!

(மதிப்புறு முனைவர்.திருக்குறள் நாவை. சிவம்)

*முப்பாலுக் கப்பாலே எப்பாலு மில்லை!*
*மூவேந்தர் அறிந்தாரா எனத் தெரியவில்லை!*
*தப்பாமல் உலகத்தின் அடிப்படையை ஆய்ந்தும்*
*தவறாமல் வாழ்வியலின் நுட்பத்தில் தோய்ந்தும்*
*ஒப்பீடு சொலமுடியாச் சுரங்கமெனக் காட்டும்*
*உறுமுயற்சி செயுந்தோறும் புதுமைபல நீட்டும்!*
*இப்பாரை உயர்த்திடவே எழுந்தசுடர் போலே*
*இனியதிருக் குறள்பெற்றோம் தமிழ்வானின் மேலே!*

*நெறியாக, மறையாகத் திசையெல்லாம் போற்றும்*
*நிறைதமிழின் மணிமுடியாய் அடையாளம் சாற்றும்!*
*அறமாகப் பொருளாகக் காமமெனத் தோற்றி*
*ஆயிரத்து முந்நூற்று முப்பதுபா ஏற்றித்*
*திறமாக ஒருநூற்று முப்பத்து மூன்றாய்த்*
*தித்திக்கும் செங்கரும்பாய் அதிகாரம் ஊன்றிச்*
*செறிவாகக் கணுக்கள்போல் பத்துகுறள் நாட்டிச்*
*சிறப்புதரும் வள்ளுவமே வையவழி காட்டி!*

*இல்லாத சொல்லாத கருத்தேதும் உண்டா?*
*இணையதளம் நவில்கிறதே இனிக்கும்கற் கண்டாய்!*
*நல்லாண்மைத் தமிழரெல்லாம் நாடுகிற வாழ்வில்*
*நலமாகப் பற்றாமல் நலிகின்றார் தாழ்வில்!*
*பொல்லாப்பே இல்லாமல் வள்ளுவத்தின் ஆண்டை*
*பூரிப்பாய்ப் பின்பற்றி நடையிடுவோம் யாண்டும்*
*வல்லாண்மை யுடன்கேட்போம் வண்டமிழர் ஒன்றாய்!*
*வள்ளுவத்தைத் தேசியநூல் ஆக்கிடுக என்றே!*

*மெச்சிடவே பேசுவதால் பயனேதும் இல்லை!*
*மிகநல்ல வாழ்வாக்கின் விலகிடுமே தொல்லை!*
*உச்சிமலை முகட்டினிலே புகழொளியும் விஞ்ச*
*உயர்ந்திருக்கும் வள்ளுவச்சீர் உள்ளமெலாம் கொஞ்ச*
*எச்சமொன்று வேண்டுமெனில் இப்பிறவிப் பேறாய்*
*இனியகுறள் தொண்டுசெய்வோம் எழுச்சியுடன் நூறாய்!*
*பச்சரிசி வெல்லமொடு பாற்பொங்கல் செய்வோம்!*
*பைந்தமிழால் வள்ளுவத்தால் பலகாலும் உய்வோம்!*

---

# மணற்பாறையில் திருவள்ளுவர் திருவிழா




உலகத் திருக்குறள் பேரவையின் கிளையாக இயங்கிவரும் மணற்பாறை திருக்குறள் பயிற்றகத்தின் 39ஆம் ஆண்டுத் திருவள்ளுவர் திருவிழா தி.பி. 2048 சுறவம்-2 (15.1.2017) ஆம் நாள் ஞாயிற்றுக்கிழமை மணற்பாறை - நகராட்சித் தொடக்கப்பள்ளி வளாகத்தில் நடைபெற்றது.

மாநிலச் செயற்குழு உறுப்பினரும், திருக்குறள் பயிற்றக நிறுவுநருமாகிய மதிப்புறு முனைவர் திருக்குறள் நாவை.சிவம் சீரிய முயற்சியில் நடைபெற்ற விழாவில், திருக்குறள் முற்றோதல் திருவள்ளுவர் பட வீதிஉலா, தெருவெல்லாம் தமிழ்முழக்கம் முச்சந்திகளில் முப்பால் விளக்கம், திருக்குறள் கோலாட்டம், தமிழிசைப் பாடல்கள் முதலிய நிகழ்வுகளுடன் பள்ளி மாணவர்கள் திருக்குறள் போட்டிகளுக்குப் பரிசளிப்பும் குறளிய, தமிழிய கருத்தரங்கும் நடைபெற்றது.

தஞ்சாவூர் நாவலர் ந.மு.வேங்கடசாமி நாட்டார் கல்லூரிப் பேராசிரியர் முனைவர் இரா. கலியபெருமாள் முப்பாலே எப்பாலும் ஒளிகாட்டும் என்ற தலைப்பிலும் கடலூர் கதிர் முத்தையன் திருவள்ளுவர் ஆண்டின் தனிச்சிறப்பு பற்றியும் பேருரையாற்றினர். தொண்டில் பழுத்த எழுவர்க்குப் பாராட்டுப் பட்டயம் வழங்கப்பெற்றது. உலகத் திருக்குறள் பேரவை மாநில மகளிரணிச் செயலர் திருவாட்டி சந்திரா இரவீந்திரன் அவர்கட்குக் "குறள்நெறிச்சுடர்" என்ற பட்டமும் தஞ்சாவூர் அ. கோபிசிங் அவர்கட்கு "திருக்குறள் செம்மல்" என்ற பட்டமும் வழங்கப்பெற்றது.

தமிழ்வழிக் கல்வியை நடைமுறைப்படுத்தவும் திருக்குறளைத் தேசிய நூலாக்கவும் தீர்மானங்கள் நிறைவேற்றப்படுகின்றன.

---

## உலகத்திருக்குறள் பேரவை – தூத்துக்குடி மாவட்டக் கிளையின் மாதாந்தரக் கருத்தரங்கம்

உலகத் திருக்குறள் பேரவை தூத்துக்குடி மாவட்டக் கிளையின் மாதாந்தரக் கருத்தரங்கம் சி.எம்.மேனிலைப்பள்ளி அரங்கில் வழக்கறிஞர் அ.செங்குட்டுவன் தலைமையில் உலகத் திருக்குறள் பேரவை மாவட்டத் தலைவர் ஆ. திருச்சிற்றம்பலம், கவிஞர். ச.சவகர்லால், பேராசிரியர்.சு.கந்தசாமி முன்னிலையில் நடைபெற்றது.

உலகத் திருக்குறள் பேரவை மாவட்டச் செயலாளர் மோ. அன்பழகன் வரவேற்றுப் பேசினார்.

அறிவுச் செல்வம் – திருக்குறள் முற்றோதுதல் செய்தார்.

திரையிசைப் பாடல்களில் இலக்கியக் கூறுகள் எனும் தலைப்பில் ஆசிரியர் ஞானபன்னீர் செல்வம் உரையாற்றினார்.

நிகழ்ச்சியில் பேராசிரியர் குமரிக்கண்ணன், மாவட்ட வருவாய் முன்னாள் அலுவலர் சக்திவேலு, மருத்துவர் த. இராசலிங்கம், ஆசிரியர் அருமைநாயகம், ஆசிரியர் சுந்தரி, முனைவர் இராசேசு, மாவட்டக் கருவூல முன்னாள் அலுவலர் செய்யத் முகம்மது செரீப், கவிஞர் செல்வராமன், கனகலட்சுமி, பழனியம்மாள், திருமகள் மற்றும் பேரவை உறுப்பினர்கள் கலந்து கொண்டனர். ஆசிரியர் மனோசேவியர் நன்றி கூறினார். கவிஞர் ச.சவகர்லால், திருமதி. பழனியம்மாள் தம்பதியர்க்கு திருமண வாழ்த்து தெரிவிக்கப்பட்டது.

---

சிலருக்கு வாழ்க்கை "பிழைப்பு"
பலருக்கு வாழ்க்கை இருத்தல்.
"ஏதோ இருக்கின்றேன்" என்ற விரக்தி.
ஏதோ இருக்கிறேன் என்பார்கள்.
சிலர் மட்டுமே வாழ்கிறேன் என்பார்கள்.
வாழும் கலை அறிந்தவர்கள்
பிறரையும் வாழவைக்கும் கலை கற்றவர்கள்.
வாழ்க்கை வாழ்வாங்கு வாழ்வதற்கே என்பதைத்தான்
நம் சமயம் கற்றுத் தந்தது.

**– தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்**

*மனதின் ஈடுபாட்டிற்கு ஏற்ப முயற்சியில் வெற்றியின் அளவு அமைகிறது.*

**– விதுரநீதி**

# நில்லா உலகில் நிலைத்தறிவு நம்பியே!

(தமிழாகரர் தெ.முருகசாமி)

குவலயம் போற்றும் குன்றக் குடியின்
தவலருஞ் சிறப்பின் தவத்திரு அடிகள்
ஆதீ னத்தின் அமிர்த கவியென
ஓதிப் புகழ்ந்த உத்தம ஆசான்
அறிவை நம்பியே அகிலம் உள்ளதால்
அறிவு நம்பியென அன்றுன் தந்தை
அமிர்த லிங்கர் பெயர்வைத் தாரோ?
அமிர்தமய் மான அறிவுப் பேச்சும்
ஆரையும் ஈர்க்கும் அன்புரைச் சொல்லும்
ஊரை உலகை உவக்கச் செய்யும்
'தினமணி' தன்னில் திறமுடன் எழுதும்
மனமகிழ் எழுத்தும் மாசறப் பெற்ற
கனத்த புகழால் காசினி வாழ்க்கை
மனத்தள வில்தான் போதும் என்றே
கண்ணை மூடிக் காணா உலக
விண்ணுள் ளோர்க்கு வண்டமிழ் உரைக்க
விரைத்திட் டாயோ? விம்மும் மனைவி
கரைந்திடும் மகனாம் அமிர்த சரவணன்
பற்பல நண்பர் பலபே ரறிஞர்
கற்கும் பல்கலைத் தமிழ்த்துறை சார்ந்த
மாணாக்க ரோடே மற்றும் புதுவை
மாண்பைக் கூட்டும் புதிமத் தார்கள்
தேம்பித் தேம்பித் தேயா நினைவால்
கூம்பிய மனந்தான் குலைந்திட, அந்தோ!
அறிவு நம்பியே! யாரை நம்பி
வெறிதாய்ச் சென்றீர்? வ.சுப.மாவின்
மாப்புகழ் தன்னை மறவா தென்றும்
பூப்போல் போற்றிப் பொலிவிப் பீரே!
காரைக் குடியில் கனத்தமா மதுரையில்

*சீரைக் கொண்ட செந்தமிழ் உறவால்*
*தந்தை அனையர் மக்கள் என்ற*
*அந்ததொல் காப்பியர் உரைக்கும் மேலாய்*
*தம்மின்தம்மக்கள் அறிவுடைமை என்ற*
*செம்மொழிக் குறளின் செம்பொருள் புகழையும்*
*ஒருங்கே கொண்ட ஒண்டமிழ் நம்பியே!*
*இருந்தமிழ் தனக்கு உழைத்த உழைப்பால்*
*பரசும் நூல்கள் பலப்பல தந்தீர்!*
*பரிசும் விருதும் பலவாய்ப் பெற்று*
*தரிசனம் தந்த தன்னே ரில்லா*
*கரிசனம் மிக்க அறிவு நம்பியே!*
*மலர்ந்தஉன் முகந்தான் மறக்கற் பாலதோ?*
*அலர்ந்திடும் உன்தன் அற்புத பேச்சுதான்*
*காசினி போற்றும் கம்பன் மேடை*
*மாசில் மாத்தமிழ் மன்றம் அரங்கம்*
*எல்லாம் இனிமேல் உனைத்தே டிடுமோ?*
*நில்லா உலகில் நிலைத்தறிவு நம்பியே?*

---

## அவர் ஒரு அறிவுக்கடல்

1950-களில் நாத்திகக்கருத்து அதிகமாகப் பரவி கடவுள் இல்லை கடவுள் இல்லவே இல்லை என்றெல்லாம் சொல்ல ஆரம்பித்தார்கள். அப்போது பெரியவர் தவத்திரு குன்றக்குடி அடிகளார் அருள்நெறித் திருக்கூட்டங்களை செட்டிநாட்டு ஊர்களில் எல்லாம் நடத்தி திருவாசகத்தை மக்கள் விரும்பிப் படிக்குமாறு செய்தார்கள். "நமச்சிவாய வாழ்க! நாதன் தாள் வாழ்க!" இமைப்பொழுதும் என்நெஞ்சில் நீங்காதான் தாள் வாழ்க! என்று அடிகளார் சொல்லும்போது அவருடைய குரல் வளமும் சொல்லும் முறையும் எல்லோரையும் பக்தி மார்க்கத்தில் ஆழ்த்திவிடும். இளம் வயதில் அடிகளார் பேச்சைக்கேட்கும் வாய்ப்புப் பெற்ற என்னைப் போன்றவர்கள் பெரும்பேறு பெற்றவர்கள். அவர் ஒரு பக்திப் பொக்கிஷம்; அறிவுக் கடல்.

**- இராயவரம் சுப. சுப்பிரமணியன்**

நன்றி : நகரத்தார் மலர், மார்ச் 2017

## சிறப்பாசிரியருக்குக் கடிதம்....

வணக்கத்திற்கும் வழிபாட்டிற்கும் உரிய குருமகாசந்நிதானம் திருமுன்பிற்குப் பணிவுடன் எழுதிக்கொள்வது.

சித்திரைப் பிறப்பான முதல் நாள் அடிகள் அருளுரையை வானொலியில் கேட்டு மகிழ்ந்தேன்.

குழந்தைகளின் மழலையை வள்ளுவர் சுவைத்த பாங்கை நேர்த்தியாக உரைத்த போது செவிநுகர் கனிகளாக இருந்தன.

சித்திரைப் பிறப்பில் முத்திரை பதித்த உரை கேட்டு, இந்த நாளில் குன்றக்குடி சண்முகநாதப் பெருமானுக்குப் பால்குடம் எடுக்கும் நிகழ்வுகளை மனக்கண்ணால் நினைந்து அடிகள் நல்லாசியையும் நினைந்தேன்.

முத்திரை பதித்த
சித்திரை சிறப்பில்
இத்தரை இயம்பிய
இருந்தமிழ்க் குன்றக்
குடியின் நிகழ்ச்சிகள்
குடிகொள மகிழ்ந்து
அடிகள் ஆசியை
அருளவேண் டினனே!

- தெ. முருகசாமி, புதுச்சேரி

---

## நெல்லை மாவட்ட உலகத் திருக்குறள் பேரவை திருக்குறள் தொடர் சொற்பொழிவு

நெல்லை மாவட்ட உலகத் திருக்குறள் பேரவை சார்பில் பாளையங்கோட்டை தமிழ்ச் சங்கத்தில் 16-வது தொடர் சொற்பொழிவு நடைபெற்றது. முன்னாள் மாவட்டக் கல்வி அலுவலர் அ.இராசகிளி தலைமை தாங்கினார். முனைவர். பா. வலின் அரசு முன்னிலை வகித்தார். பேராசிரியர். கி. சவுந்தரராசன், கவிஞர் த.மு.சா.காசாமுகைதீன் சிறப்புரையாற்றினார். இரா. முருகன் நன்றி கூறினார்.

மறைந்த முதல்வர் மாண்புமிகு ஜெயலலிதா பேரவைப் பொதுச் செயலாளர் மணிமொழியனார், தமிழறிஞர் வா.செ. குழந்தைசாமி ஆகியோர் மறைவுக்கு இரங்கல் தெரிவித்து தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.



## குன்றக்குடியில்

# விசாகப் பெருவிழா

குன்றக்குடி அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கு விசாகப் பெருவிழா 7.6.2017 புதன் கிழமையன்று சிறப்பாக நடைபெற்றது.

அன்று காலை 7.15 மணி அளவில் திருக்கோயிலிலிருந்து அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெட்டிவேர்த் திருக்கோலத்துடன் ஆதீனத் திருமடத்துக் கொலுமண்டபத்துக்கு எழுந்தருளினார். திருமடத்து முகப்பில் திருவருள்திரு குருமகாசந்நிதானம் (தவத்திரு பொன்னம்பல அடிகளார்) அவர்கள் பெருமானுக்கு பொன்னாடை, மாலை அணிவித்து தீப ஆராதனை செய்து வரவேற்பளித்தார்கள். பின்னர் அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருமடத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு காளத்திநாதர் சந்நிதிக்கு எழுந்தருளினார். அதுபோது தீபாராதனை செய்யப்பெற்றுக் கொலுமண்டபத்துக்கு வருகை புரிந்தார். வேதபாராயணம், திருமுறைப் பண்ணிசை, நாதசுர இசை ஆகியவை தனித்தனி முழங்க கொலுமண்டபத்தில் மும்முறை வலம் வந்து கொலுமண்டபத்தின் பீடத்தில் எழுந்தருளினார். பின்னர் சிறப்பு தீபாராதனை வழிபாடு நிகழ்ந்தது. அதன்பின் பெருமானுக்கு கவிஞர் அறுவர் வரவேற்புத் தமிழ்ப்பாமாலை பாடினர்.

முற்பகல் 11.30 மணியளவில் திருமுழுக்காட்டுத் தொடங்கி நடைபெற்று 12.30 மணியளவில் பச்சை சாத்துப்படி செய்து சிறப்பு வழிபாடு நிகழ்ந்தது.

இரவு 7 மணியளவில் பாராட்டு விழா நடைபெற்றது. பேராசிரியர் திரு சொ. சேதுபதி வரவேற்புரையாற்றினார். திருவருள்திரு குருமகாசந்நிதானம் அவர்கள் விழாத் தலைமையேற்று, திரு. அரு.வே. மாணிக்கவேலு அவர்களுக்கு "அறமனச் செம்மல்" என்னும் பட்டமும், பேராசிரியர் திரு. இரா.மோகன் அவர்களுக்குத் "தமிழாகரர்" என்னும் பட்டமும் வழங்கிப் பாராட்டிச் சிறப்பித்தார்கள். காரைக்குடி அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் பேராசிரியர் முனைவர் திரு.எஸ்.சுப்பையா அவர்கள் பாராட்டுப் பெற்றவர்களுக்குப் பாராட்டுரை வழங்கினார். பாராட்டுப் பெற்றவர்களின் ஏற்புரைக்குப் பின் இலக்கிமேகம் திரு. ந. சீனிவாசன் அவர்கள் "குருவாய் வருவாய்" என்னும் தலைப்பில் சிறப்புரையாற்றினார். பேராசிரியர் திரு சொ. சேதுபதி அவர்கள் தொகுப்புரையும் நன்றியுரையும் ஆற்றினார்.

இரவு 10 மணி அளவில் அருள்தரு சண்முகநாதப் பெருமான் வெள்ளி ரதத்தில் எழுந்தருளித் திருவீதி உலா நடைபெற்றது. விழா நிகழ்ச்சிகளில் அறிஞர்கள் அன்பர்கள் நூற்றுக்கணக்கானோர் வருகைதந்து சிறப்பித்தனர். விழா இனிதே நிறைபெய்தியது.

## தோழமைச் சிறப்பு

வாழ்க்கையில் காதலை ஒப்பச் சிறப்புடைய பண்பு நட்பு; இல்லை, காதலைவிடக்கூட நட்பு சிறந்தது. எந்தவொரு உயிரும் தனித்து வளர்தல் அரிது. உயிர், முதல் நிலையில் சுதந்திரமாக மனம் விட்டுக் கலந்துபேசி உரிமையையும் உறவையும் பகிர்ந்து கொள்வதற்கு ஏற்றது நட்பேயாம். நட்பில்லாத வாழ்க்கை நிலவில்லாத வானம் போன்றது. நட்பு ஓர் உயரிய வாழ்க்கை முறை. ஆங்கிலச் சிந்தனையாளர்கள், "காதலிக்காமல்கூட இருக்க முடியும்; நட்பில்லாதிருக்க முடியாது" என்று கூறுகின்றார்கள். அகம் நிறைந்த நண்பினராகி வாழ்வளிக்கக்கூடிய நண்பர்கள் கிடைப்பதரிது. பழகுவோரெல்லாம் நண்பர்களாகிவிட மாட்டார்கள்.

- அருள்நெறித்தந்தை



# அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார்

## உஉஆம் ஆண்டு

# குருபூசை விழா

குன்றக்குடித் திருவண்ணாமலை ஆதீனம் 45 ஆவது குருமகாசந்நிதானம் திருவருள்திரு அருணாசலதேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு குன்றக்குடி அடிகளார்) அவர்களின் 22ஆம் ஆண்டு குருபூசை விழா 9.5.2017இல் குன்றக்குடியில் சிறப்பாக நடைபெற்றது.

அன்று காலை 8.00 மணியளவில் 46 ஆவது குருமகா சந்நிதானம் திருவருள்திரு பொன்னம்பல தேசிக பரமாச்சாரிய சுவாமிகள் (தவத்திரு பொன்னம்பல அடிகளார்) அவர்கள் திருமடத்தில் எழுந்தருளியுள்ள அருள்தரு காளத்திநாதருக்கும் அதன்பின் அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்கும் சிறப்பு வழிபாடு நிகழ்த்தினார்கள். மதியம் 12 மணியளவில் 45ஆவது திருவருள்திரு குருமகா சந்நிதானம் அவர்கள் குருமூர்த்தத் திருக்கோயிலில் சிறப்பு வழிபாடு செய்துகொண்டார்கள். அதுபோது அந்தச்சந்நிதியில் ஆதீன அலுவலகத்தில் பணிபுரியும் ஆதீனக் கவிஞர் திரு மரு.பரமகுரு, ஆதீன நேர்முக உதவியாளர் திரு. க. நீலமேகன் ஆகிய இருவருக்கும் முதல்முறையாக "தவத்திரு குன்றக்குடி அடிகளார் விருது" வழங்கி வாழ்த்தியருளினார்கள். பகல் 1 மணியளவில் அன்னம் பாலிப்பு நடைபெற்றது. ஏராளமான மக்கள் கலந்துகொண்டு குருவருள் பெற்று மகிழ்ந்தனர்.

# அடிகளின் தமிழ் வேட்கும் ஐயனே வருக! வருக!

## (சண்முகநாதப்பெருமான் வருகைப்பாமாலை)

(பொன்னம்பலக்கவிராயர்)

வெறிகொண்டு திரிகின்ற
அசுரர்கள் மிகுகின்ற
காலத்தில் வாழுகின்றேன்;
வேல்கொண்டு மயிலேறி
விளையாடு முருகனே
விரைந்தெமைக் காக்க வருக!
நெறிகொண்டு வாழ்பவர்
நொடிதோறும் சாகின்ற
நில்லமாற்ற விரைந்து வருக!
நெடும்பண்டைக் காலமாய்க்
குடிகாக்கும் வேலனெனும்
பெயர்காக்கக் கடுகி வருக!
அறிவொன்று, நினதருளை
உணர்கின்ற தெளிவென்று
அறிவித்த ஞானகுருவே
அறியாமை இருளகல
நெற்றிக்கண் உதித்தசிவ
பாலனே எழுந்து வருக!
குறியொன்றும் குணமொன்றும்
இலனென்றும் உளனென்றும்
கூறுவோர் உலகமீதில்
குறைதீர்க்கும் தவக்குன்றக்
குடியடிகள் தமிழ்வேட்கும்
குழகனே காக்க வருக!

செல்லாத ஆயிரம்
ரூபாய்கள் போலவே
சேர்ந்தவர் ஆயிரம் பேர்;
சேமிப்பைக் கணக்கிலே
காட்டாத செயல்போலப்
பாவங்கள், பல கோடியில்!
இல்லாத மனிதர்க்கு
இருக்கின்ற ஓட்டுபோல்
எத்தனை மன ஓட்டைகள்;
எல்லாமும் பணம் செய்யும்
என்கின்ற மமதையில்
எண்ணிலாச் சதித்திட்டங்கள்!
பொல்லாத உலகத்தில்
விலையாக முயல்கின்ற
போலிகள் நடமாட்டமும்
போதாது, போதாது
எனத்தேடும் வேட்டையில்
பொய்யர்தம் பெருங்கூட்டமும்
நில்லாது போகவே
நின்றாளும் குமரனே
நெறியருள இரங்கி யருள்க!
நிதம்பூசை புரிகின்ற
அடிகளின் தமிழ் கேட்கும்
நிமலனே வருக வருக!

மலை கொண்டு வயல்தின்று
மணல்மொண்டு போகின்ற
மனிதர்கள் அசுரராக
நிலை குன்றி வெறி கொண்டு
நெறிகொன்று திரிகின்ற
கலியுகம் இதுவல்லவா?

விலை கொண்டு உயிர்கொன்று
உடல்தின்று பிழைக்கின்ற
வீணர்கள் பெருகுகின்றார்;
விளைவேதும் அறியாமல்
இயற்கையொடு விளையாடி
விபரீதம் செய்துநின்றார்;
தலைகொண்டு போனாலும்
நின்றாடு முண்டமெனத்
தகவிலா தாடுகின்றார்;
தாயக மனைத்தையும்
கூறுபோட்டுலகமாச்
சந்தையில் போடுகின்றார்;
நிலைகெட்ட தீயவர்
செயலற்றுப் போகவே
வேல்கொண்டு வருக முருகா!
நிதம்பூசை புரிகின்ற
அடிகளின் தமிழ் கேட்கும்
நிமலனே வருக வருக!

உறவுபொய்; நட்புபொய்;
உரையாடு கின்றவர்
உரைக்கின்ற யாவும் பொய்கள்;
உண்மைபொய்; வாய்மைபொய்;
உணர்ச்சிபொய்; கண்ணில் நீர்
உதிர்வதெல்லாம் பொய்களே
அறிவுபொய்; அன்புபொய்;
ஆசைபொய்; செய்கைபொய்;
அனைத்திலும் பொய்கள்; பொய்கள்;
ஆண்மைபொய்; பெண்மைபொய்;
ஆணவம் காமமும்பொய்;
பரிவுபொய்; பணிவுபொய்

பக்திபொய்; பண்ணிடும்
பணிகளும் பெரும் பொய்களே!
படிப்புபொய்; நடிப்புபொய்;
பதவிபொய்; பயமும்பொய்;
பாசமும் மிகுபொய்களே!
அரிதுகாண் உலகிலே
அடியனேன் நினதுபொன்
மலரடி பணிந்து வாழ்தல்;
அனுதினமும் பணிகின்ற
அடிகளின் தமிழ் கேட்கும்
ஐயனே காக்க வருக!.
அடைக்கலம் நீயென
அடைந்தபின் எழுகின்ற
அச்சமும் பொய்யல்லவா?
அடியவர் திருக்கூட்டம்
பெருகிடப் பெருகிட
அசுரர்கள் பொடியல்லவா?
படைக்கலம் ஆயிரம்
சுரரேந்தி வந்தாலும்
பயமெனக் கில்லை முருகா,
பன்னிருகை வேலனே
பன்னிரு விழிகளால்
பார்க்கிறாய் அருமை முருகா!
துடைக்கினும் போகிலேன்;
துயரினில் வீழ்கிலேன்;
துணிவுடன் எழுதுகின்றேன்
தூயதிரு வடிகளால்
அயன்கரத் தெழுத்தினைத்
துடைத்திடும் ஞானகுருவே!
கடைக்குலத்தேன்எனைக்
கனிந்த பேரன்புடன்
கலையேற்றி யருள வருக!

கவின்குன்றக்குடி யடிகள்
தமிழ்கேட்டுவகையுறும்
கந்தனே வருக வருக!

சுழன்றோடும் புவிபோலப்
பலகோள்கள் நிலைகொண்ட
அண்டத்தை இயக்குகின்றாய்;
சூரரோ இவரெலாம்;
அற்பர்கள் தூசென
விலக்கியே ஆளுகின்றாய்;
சுழன்றோடும் பவவினைகள்,
கர்மங்கள், இழிசெயல்கள்
காலத்தில் நிலைத்து நில்லா;
கந்தனே, குமரனே
கருணை வடிவேலனே
காரியம் ஒன்று நிற்கும்!
தளர்ந்தாடு தேகத்தில்
தமிழ்பாடும் நா தந்தாய்
தலைவனே பாடுகின்றேன்;
தகராறு செய்யவரும்
காலனை நினதருள்
கழலினால் வெல்லுகின்றேன்!
கிளர்ந்தாடு மரஞ்செறி
கிரியாவும் உறைகின்ற
கிழவனே வருக வருக!
கிளிகொஞ்சும் தலமீதில்
அடிகளின் தமிழ்கேட்கும்
குமரனே காக்க வருக!

- (07.06.2017 அன்று குன்றக்குடி ஆதீனத் திருமடத்துக் கொலுமண்டபத்துக்கு எழுந்தருளிய அருள்தரு சண்முகநாதப் பெருமானுக்குத் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார் அருள் தலைமையில் பாடிக் கொடுத் த வரவேற்புப் பாமாலை).

# குன்றக்குடியில்
# நூல் வெளியீட்டு விழா



குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் பிறந்தநாள் விழாவையொட்டி, ஆய்வு நூல் வெளியீட்டு விழா 25.06.2017 ஞாயிற்றுக்கிழமை மாலை 3.30 மணியளவில் நடைபெற்றது.

மனித விழுமிய மேம்பாடு முதுமுனைவர் தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளாரின் **தொலைநோக்குச் சிந்தனைகள்** எனும் நூல் வெளியீடு மற்றும் அடிகளாரின் பிறந்தநாள் விழா குன்றக்குடி அடிகளார் மகளிர் கல்வியியல் கல்லூரி உயராய்வு மையத்தில் நடைபெற்றது. அழகப்பா பல்கலைக்கழகத் துணைவேந்தர் முனைவர். சொ. சுப்பையா அவர்கள் சிறப்பு விருந்தினராக கலந்து கொண்டு நூலை வெளியிட்டுச் சிறப்புரையாற்றினார்.

நூலின் முதல் பிரதியை கோவிலூர் ஆதீனம் சீர்வளர்சீர் மெய்யப்ப ஞானதேசிக சுவாமிகள் பெற்றுக்கொண்டார்கள். பிள்ளையார்பட்டி அருட்திரு. கோவிந்தானந்த சுவாமிகள், டாக்டர். சிவத்திரு. பிச்சைக்குருக்கள், காந்தி கிராம கிராமிய பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர். ஆர்.எம். ராமசாமி, வேளாண்துறை முன்னாள் இணை இயக்குநர் முனைவர். கு. சண்முகசுந்தரம் உள்ளிட்ட பெருந்தகையோர் வாழ்த்திப் பேசினர்.

விழாவில் முனைவர். மோகன், கல்லூரி இயக்குநர் முனைவர். மோகன்ராஜ், பேராசிரியர்கள், ஆசிரியர்கள், தமிழறிஞர்கள் கலந்து கொண்டனர்.

நூல் ஆசிரியர் இரா. பாலசுப்பிரமணியன் நன்றி கூறினார்.



சில வீடுகளிலே வெளிச்சுவர்களுக்கு வெள்ளையடித்து உட்சுவர்களைப் புறக்கணிக்கிறார்கள். வெளிச்சுவர் பார்ப்பவர்களின் பார்வையை ஈர்க்குமேயொழிய அவ்வீட்டில் வாழ்பவர்களுக்குப் பயன் தராது. உட்சுவர் தூய்மையற்று இருந்தால் வீட்டிலுள்ளவர்களின் நல்வாழ்வு பாழ்பட்டுப் போகும். ஆகவே உட்சுவரின் தூய்மையைக் கவனித்தபின்பே வெளிச்சுவரைத் தூய்மையாக்க முனையவேண்டும். மனிதவாழ்விலும் கூட அகவாழ்வைப் பற்றிய சிந்தனைக்குப் பின்பே புறவாழ்வைப் பற்றிய எண்ணம் எழவேண்டும். அதுவே மனித மரபு - தமிழ்மரபு. புறப் புரட்சியின் வெற்றிக்கு அகப்புரட்சி துணைசெய்யும். மணிவாசகர் போன்ற அனுபூதிமான்கள் அகத்துறைப் புரட்சியையே குறிக்கோளாகக் கொண்டு வாழ்ந்து உயர்ந்தார்கள்.

**- அருள்நெறித்தந்தை**

நூல்வரிசை - 12 (பக்.394-395)

அருள்நெறித் தந்தையின் சமயம் பற்றிய புதிய சிந்தனை எந்நாளும் எண்ணி இன்புறத்தக்கது. உடல் வாழ்வு தன்னலம் பற்றியது. உயிர் வாழ்வு பொதுநலம் பற்றியது, சராசரி மனித வாழ்க்கையை உயிர்ப்புள்ளதாக்கி முழுமையாக்கும் உணர்வின் தேவையிலே தோன்றியது சமயம். இதனை மகாசந்நிதானம் "பொதுவில் ஆடுபவன் நிழலின் பொதுமையைக் காணாமல், தீமையை அகற்றாமல், நன்மையைச் சாதிக்காமல், துன்பத்தைத் துடைக்காமல், இன்பத்தைப் படைக்காமல் கிழடுதட்டிச் செயலிழந்துபோன நமது சமய அமைப்புகள் குறையுடைய நடைமுறைகளே!" என்று சமய உலகை மாபெரும் புனருத்தாரணம் செய்ய வேண்டும் என்று அறைகூவுகின்றார்கள். சமயம் மனிதத்தை மேம்படுத்த! சமயம் மனித வாழ்வுக்கே! சமயம் மனிதத்தைப் புனிதமாக்க என்ற உயர்நிலையில் சமய உலகப் பாதைக்கு நம்மை அழைத்துச் செல்லும் அருள்நெறித் தந்தையின் பாதையில் பயணம் செய்ய. சமய இலக்கியம் வாழும் மானிடத்திற்கு அற்புத வழிகாட்டியாகும்.

**- தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

திருச்சிராப்பள்ளி மாவட்ட

# அருள்நெறித் திருக்கூட்டத் தலைவர்

## சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை அவர்கள்

# காலமானார்!

திருச்சிராப்பள்ளி மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டத் தலைவர் சிவத்திரு ப. மூக்கப்பிள்ளை அவர்கள் 22.6.2017இல் காலமானார். இச்செய்தியை "மக்கள் சிந்தனை" ஆழ்ந்த வருத்தத்துடன் தெரிவித்துக் கொள்கிறது.

சிவத்திரு ப. மூக்கப்பிள்ளையவர்கள் சைவசீலம் பொருந்திய வாழ்க்கையினர். திருச்சிராப்பள்ளி மாவட்ட அருள்நெறித் திருக்கூட்டத்தின் தலைவராக 40 ஆண்டுகளுக்கு மேலாகப் பணியாற்றிய திருத்தொண்டர். சிவபூசைச் செல்வர். நமது குன்றக்குடி ஆதீனத்தின்பால் அயரா அன்பு பூண்டிருந்தவர். நமது ஆதீனம் 46ஆவது குருமகா சந்நிதானம் அவர்களால் "அறநெறி அண்ணல்" என்னும் பட்டம் வழங்கிப் பாராட்டப் பெற்றவர். பெருவணிகர். ஆயினும் தாம் ஈட்டிய பொருளின் ஒரு பகுதியை அறப்பணிகளுக்கு அள்ளி வழங்கிய பெருந்தகையார். திருச்சிராப்பள்ளித் தமிழ்ச்சங்கம், திருச்சிராப்பள்ளி சைவ சித்தாந்தசபை முதலியவற்றில் தலைவராக இருந்து தமிழ்ப்பணியும் சைவப்பணியும் ஆற்றியவர். திருச்சிராப்பள்ளி மலைக்கோட்டை அருள்தரு தாயுமானசுவாமி திருக்கோயில் அறங்காவலராகப் பல்லாண்டுகள் இருந்து அறப்பணியாற்றியவர்.

இப்பெரியாரின் மறைவு சைவ உலகிற்கும் தமிழ் உலகிற்கும் ஈடுசெய்ய முடியாத பேரிழப்பாகும். இவரை இழந்து துயரத்தில் ஆழ்ந்திருக்கும் இவர்தம் குடும்பத்தினருக்கும் அருள்நெறி அன்பர்களுக்கும் தமிழன்பர்களுக்கும் மக்கள் சிந்தனை ஆழ்ந்த இரங்கலைத் தெரிவித்துக் கொள்வதுடன் இப்பெரியாரின் நல்லுயிர் சிவனடிக்கீழ் இன்புற்றமர்ந்திட இறைஞ்சுகிறது.

– ஆசிரியர்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

சிறப்பாசிரியர் : **தவத்திரு பொன்னம்பல அடிகளார்**

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின்அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | ½ பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | | |
|---|---|---|
| தனி இதழ் | ரூ. | 8.00 |
| ஆண்டுச்சந்தா | ரூ. | 90.00 |
| ஆயுட் சந்தா | ரூ. | 1000.00 |
| புரவலர் கட்டணம் | ரூ. | 2000.00 |

**சந்தா – விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :**

நிர்வாகி
**மக்கள் சிந்தனை**
குன்றக்குடி – 630 206
சிவகங்கை மாவட்டம்
தொலைபேசி எண் : 04577 - 264227

இந்தியன் வங்கி, பிள்ளையார்பட்டி கணக்கு எண் : 554267544 மூலமும் மணியார்டர், வங்கி வரைவோலை / காசோலை மூலமும் அனுப்பலாம்.

ஆதீன இணையதள முகவரி : website : www.kkmutt.org

ஆசிரியர் : **மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் : ஸ்ரீ சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி



7-6-2017, விசாகவிழாவில் திரு. அரு. வே. மாணிக்கவேலு,
பேராசிரியர் திரு. இரா. மோகன் ஆகியோரைப் பாராட்டிப் பட்டம் வழங்கும் நிகழ்வு.

BOOK POST
Book pocket containing printed matter
MAKKAL CHINTHANAI-April-June 2017

Price Rs. 8-00
Date of Publication 26-06-2017



பெறுந

திரு

திருவருள்திரு சுவாமிகள் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்,
கோவிலூர்,
மானகிரி-(அஞ்சல்),
காரைக்குடி-(வழி),




அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166